# மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும்



திரு. கு. பாலசுந்தர முதலியார்
இயற்றியது






எஸ். வாஸன் கம்பெனி,
மயிலாப்பூர் :: சென்னை-4.

ரிஜிஸ்தர் செய்தது] 1958 [விலை ரூ. 2·10 nP.

# PREFACE

This little book, 'Mannavar Nidium, Mangaiyar Manbum', is an adaptation of 'Sesame and Lilies', the two Lectures delivered by John Ruskin at Manchester in the year 1864. The views and sentiments of Ruskin may, perhaps in a few instances, appear in this book in a slightly modified form, which has been necessitated by considerations of bringing them within the grasp of the Tamil mind.

The first part of this book, 'Mannavar Nidi', mainly deals with the right and proper sort of education, which is to be gained only by a proper study of the mighty minds of old and of what education ultimately leads to. It also presents to the reader that education without moral excellence is like rain and sunshine fallen on unbroken soil. For the purpose of substantiating the truth that moral excellence is an indispensable element in all forms of human greatness, the characters of Rama, Barata, Daruma, Veema, Karna and Harischandra are delineated in vivid pictures, which, I hope, will also serve as a character study for the student of Tamil literature.

The second part, namely, 'Mangaiyar Manbu', deals with the greatness of women, the territories over which good women exercise their sway as the 'Queens of Gardens' and the true nature of home which is

'the place of peace; the shelter, not only from all injury, but from all terror, doubt and division'. The place of women both at home and in the world is discussed in conformity with the Tamilian conception.

The reader is cited with the testimonies of Kamba, Ilangovadigal, and a host of other Tamil poets in order to vindicate the rights and prerogatives of women. The character sketches of Sita, Kaikeyi, Kannaki, Madavi, Manimekalai, Drowpati, Damayanti and Chandramati, drawn from the works of these poets, are sure to inspire women in general to follow the footsteps of those glorious women to save humanity.

Purasawalkam
November 1, 1934

K. BALASUNDARAM.

ஸ்ரீ:

# நூன் முகம்

திருவாளர் கு. பாலசுந்தர முதலியார் அவர்கள் எழுதிய "மன்னவர்நிதியும் மங்கையர்மாண்பும்" என்னும் நூலை யான் படித்துப் பார்த்தேன்.

இந் நூல் **ஜான் ரஸ்கின்** என்னும் அருங்கலைவிநோதர் ஆங்கில மொழியில் 'சிசேம் அண்டு லில்லீஸ்' எனப் பெயர் வைத் தெழுதிய நூலைத் தழுவி, தமிழ்நூற் பொருள்கள் பலவற்றைச் சேர்த்து எழுதப்பட்டுளது.

இந் நூல் இரண்டு பகுதிகளாகப் பகுக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள், முதற்பகுதி 'மன்னவர்நிதி' என்பது. அதன்கண் கல்வியினுல் மக்கள் எய்தும் நலங்களும், கல்வி கற்கும் முறைகளும், நூல்நிலையங்களால் மாந்தர் அடையும் இன்பங்களும், அவைபோல்வன பிறவும் கற்போர்மனத்தைக் கவரு முறையில் நன்கு விளக்கி யெழுதப்பட்டிருக்கின்றன. அன்றியும், புவியரசர்களின் இயல்புகளைப்பற்றியும் கவியரசர்களின் இயல்புகளைப்பற்றியும் அதன்கண் எழுதப்பட்டுள்ள விடயம், மக்களின் அறியாமை யென்னும் நோய்க்குச் சிறந்த மருந்தாகும் என்பதில் ஐயுறவின்று.

இரண்டாம் பகுதி 'மங்கையர்மாண்பு' என்பது. அதன்கண் மங்கையர்இயல்பும் ஆடவர்இயல்பும், மங்கையர்கடமையும் ஆடவர்கடமையும், மங்கையரால் உலகம் எய்தும் நன்மைகளும் மேன்மைகளும் நன்கு விளக்கி யெழுதப்பட்டிருக்கின்றன. அன்றியும், ஆடவர் எத்துணைச் சிறப்புடையராயினும் மாண்புடைய மங்கையர்-

துணையைப் பெருதார்வாழ்க்கை, நீரற்ற நிலம் போல்வ-தாம் என்பதும், அவர்துணையைப் பெற்ருர்வாழ்க்கை நீர்வளம் மிக்க நிலம் போல்வதாம் என்பதும் செவ்விதின் விளக்கப்பட்டிருக்கின்றன.

இந் நூல் இன்சுவை வாய்ந்த நன்மொழித்தொடர்-களேயுங் களிற்றியானேயினது நடையையுங் கொண்டு திகழ்கின்றது.

இந் நூல் மாந்தர்களே இவ்வுலகின்கண் எய்துதற்குரிய உயர்ந்த நலங்களே யெய்தும்படி செய்து, மறுமையின்பம் பெறுதற் குரிய நெறியிற் செலுத்துந் திறமுடையதாய் விளங்குகின்றது. இது கல்லூரிமாணவர் மாணவிகளுக்-கும், ஏனேயோர்க்கும் பெரிதும் பயன்படுதற் குரியதாகும் என்பது என் கருத்து.

இந் நூலாசிரியர் இன்னும் இதுபோன்ற பல நூல்-களே யெழுதி வெளியிட்டு, உலகினுக்கு நலம் புரியும் பேற்-றைப் பெறுவாராக என அவர்க்கு ஆசி கூறுகின்றேன்.

8—10—34
சென்னே.

கா. ர. கோவிந்தராஜ முதலியார்,
பச்சையப்பன் காலேஜ் ஹைஸ்கூல்
தலேமைத் தமிழ்ப்பண்டிதர்

# பொருளடக்கம்

## I. மன்னவர் நிதி

## II. மங்கையர்மாண்பு

எண் பக்க எண்

# மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும்

---

## I. மன்னவர் நிதி

**கல்வி**

பல்வகைப் பிறவியுள் மாண்புடையதெனப் போற்றப்படுவது மானிடப் பிறவியே. இப்பிறவியின் அருமையைப் போற்ருத அறிஞரே இலர். இஃதே வீடுபேற்றினை எளிதின் ஈய வல்லது. மாந்தர் இதனைப் பெற்றும் அவ் வீடுபேற்றினை யடைதற்குரிய சாதனமொன்றும் நாடாதிருத்தல், மந்திரவாள் பெற்ருெருவன் மாற்றலரை வெல்லாது தன் மெய்யையே அரிந்துகொண்டது போலாம். அந்தோ! அவர்நிலை யிருந்தவாறென்னே!

மயக்கமெனும் இருட்படாம் போர்த்த இவ் வையகத்துள் மக்கட்கு விளக்கென வுதவுவது கல்வியே. இவ் விளக்கம் பெருதார் உலகின் உண்மையை யுணர்ந்து இன்புறுவது அரிதினு மரிது. கல்விஞானம் அற்பமுமிலாதார் உயர்குடியாளராயினும், திருந்தெழில் யாக்கையராயினும், குறைவிலாச் செல்வமுடையவராயினும், மணமிலா முருக்கமலரென மதிக்கப்படுவர். இக் கல்வியைச்

செவ்விதின் எய்தப்பெற்ரேர் இழிகுடிப்பிறப்பாள-ராயினும் உயர்ந்தவரே யாவர்; திருவிலரெனினும் திருவுடையாரே. அவர்க்கு யாதும் ஊரே; யாவருங் கேளிரே. அவர்சொல் செல்லாத நாடில்லை.

" ஆற்றவும் கற்ருர் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினல்
ஆற்றுணு வேண்டுவ தில் "

என்ருர் மூன்றுறையரையரும். மக்கட்கு இம்மை-யிற் புகழையும் இன்பத்தையும் ஈந்து, மறுமைக்கு இடையூரும் மம்ம ரறுக்கு மருந்து கல்வியின் வேறுண்டோ? மாந்தர்க்குப் பெருஞ் சிறப்பினை இம்மையில் ஈந்து, தெவிட்டா வின்பமாம் அப்-பேரின்பத் தேறலையும் அவர் மறுமையில் மடுத்து உய்யுமாறு உதவி புரிவது கல்வியே யென்பது ஒருதலை.

ஆனல், இக்காலத்தில் கல்வியைப்பற்றி மக்கள் நினைவு குறுகிய நெறியிற் செல்கின்றது. அதற்கு அவர்தம் அறியாமையே காரணமாகும். அவர், தம் மக்கள் கற்பது உலகிற் சிறந்த பட்டதாரிகளாக-வும், வாகனச் செல்வராகவும், மாளிகைமன்னராக-வும் மகிழ்ந்து வாழ்தற்கே யென் றெண்ணுவர். இவ் வெண்ணம் பெரும்பான்மையும் தாய்மாரிடம் நிகழக் காண்கின்ருேம். இத்தகைய வெண்ணம் இழிந்த-தென்ருவது, இதனினும் சிறந்ததே மாந்தர்வாழ்க்-கையில் எய்தும் விழுமிய பேற்றிற்கு அடிப்படை

யென்றுவது அவர் ஓர்கின்றாரில்லை. அவர்தம் குறுகிய நோக்கத்திற்கு இலக்காகிய அவ் வின்பம் மரணத்திற்கு மக்களை முற்படச் செய்யும் போலி-யின்பம் என்பது அவர்தம் மதிக்கு எட்டுவதின்று. அன்னார்நோக்கம் பரந்த வழியிற் செல்லுமாயின், அவர் தம் மக்கட்கு உண்மைக்கல்வியை எளிதின் ஈதல் கூடும். மாந்தர் உண்மைக்கல்வியைப் பெறுதற்குப் பெருந்தனமும் பேருதவியும் வேண்-டற்பாலன வல்ல.

**மாந்தர் மனநிலை**

நாகரிகஞ் சிறந்த நாட்டி லுறையு மாந்தர், எந்திரத் தொழிலிலும், வர்த்தக வழியிலும், போர் முறைத் தேர்ச்சியிலும் நாடோறுங் காலைமுதல் மாலைவரை உழைக்கும் உழைப்பிற்குக் கணக்கே இல்லை. அவர்தம் பேருழைப்பிற்குக் காரணம் யாதென நாம் மெல்லத் துருவிப் பார்ப்பதன்முன்-னர், அதனை அவர்களையே வினவுவோமாயின், அவர்களில் உண்மையுரைப்போர், "வாழ்க்கையின் முன்னேற்றமே" எனக் கூறுதொழியார்.

"வாழ்க்கையின் முன்னேற்றம்" என்னும் அச் சொற்றொடர்க்கு அவர் கருத்து, பிறராலே மதிக்கப்-படும் உயர்நிலையை வாழ்க்கையில் அடைதல் என்பதே. வாழ்க்கையில் உயர்நிலையை எய்தவிரும்பு-மவர்நோக்கம், உலகில் செல்வத்தை யீட்டுதல் மாத்திர மன்று; தாம் செல்வராய் வாழ்தல் பலரா-லும் அறியப்படுதலுமாம்; அருஞ்செயல்களை யாற்-

றுதல்மாத்திர மன்று; அவராற்றுதல் பல்லோரா-லும் அறியப்படுதலுமாம். சுருங்கக் கூறின், இந் நோக்குடையார் புகழையே பொருளெனக் கொண்டவராவார். அவர் விரும்பு மிப் புகழே அவராற்றும் அருஞ்செயலுக்கும், வருந்தி யுழைக்கும் உழைப்-பிற்கும் காரணமாகும்.

பேரறிவிற் சிறந்த பெரியாரும் உலகில் அருஞ் செயல் ஆற்றுதற்கு மூதற்காரணமாய் அவருள்-ளத்தே குடிகொண்டிருப்பது புகழில் அவர்க்குள்ள இச்சையே யென்பதை யெவரும் மறுக்கார். அருங்-குணங்கள் பல அரும்பப் பெற்ற அப் பெரியாரும் தமக்குப் புகழ்பா லுளதாய இச்சையால் குறை யுற்றவரே யாவார். ஆனல் அக் குறை, பொற்றகடு வேய்ந்து சுற்றிலும் மாணிக்கம் பதித்த முடியின் நாப்பண் பரற்கல்லொன் றமைத்த பான்மைத்து. மாணிக்கம் பதித்த அப் பொன்முடி சிறிய அப் பரற் கல்லின் கூட்டத்தால் அறவே தள்ளற்பாற்-றன்று. அஃதே போல், அப் பெரியாரின் அருங் குணக் குவியலுள் மறைந்துகிடக்கும் இச் சிறிய குறையைப் பெருந்தவறென உலகு பேசாது. ஆனல், இக்குறையே நற்குண மொன்றுமில்லாச் சிறியர்பால் மறைந்துகிடக்காமல், அவர்தம் இழிதகைமையைத் தூற்றி வெளிப்படுத்தும்.

மாந்தர் இன்பத்திற் செலுத்தும் விருப்பம் பெருந்துன்பத்திற்குக் காரணமாதல் போல், அவர் புகழ்பாற் செலுத்தும் விருப்பமே அவர்தம் அருஞ் செயல்களுக்குக் காரணமாகும். இவ் விருப்பமே

மாந்தரைத் தங் கருமங்களில் ஊக்கி, அவரை யுலகில் பெறுதற்கரிய பதவிகளைப் பெறத் தூண்டுகின்றது. ஆனல், அவர் அப் பதவிகளைப் பெறுவது அவை- களுக்குரிய செயல்களை ஆற்றுதற்கன்று; உலகு தங்களைப் பெரியோ ரென்று போற்றுதற்கேயாம். ஆகையால், உலகில் இப் புகழே அடிப்படையாய் நின்று, இழிந்தோரையும் உயர்ந்தோரையும் அரு வினை யாற்றுவிக்கும் என்பது எவரும் ஒப்ப முடிந்த உண்மை. கடமையைக் காரணமாகக் கொண்டு அருஞ்செயல் ஆற்றுதல் வேண்டும் என்னும் விருப்பம் சில மாந்தர்உள்ளத்து எழுதலும் உண்டு. ஆனல், அவ் விருப்பம் பின் எழுவதே யொழிய, முன் எழுவதன்று.

புகழையே பொருளாகக் கொண்டவர் உலக நிலையில் உயர்ந்தாரின் உறவையே பெரிதும் நாடி நிற்பர். உயர்ந்தாரின் கூட்டத்தில் தம்மைக் காணும் உலகு தம்மையும் பெரியவ ரென்றே மதிக்கும் என்- பது அவர்தம் நோக்கமாகும். அத்தகைய நோக்- குடன் அவர் அவ் வுயர்ந்தாரிணக்கத்தைப் பல்- வகையானும் முயன்று நாடுவர்.

அங்ஙனம் அவர் முயன்று நாடுகையில் மெய் வருத்தம் பாரார்; எத்தகைய அவமதிப்பும் மேற்- கொள்ளார். அவர் விரும்பு மப் பெரியார், அவரைத் தம்மினும் இழிந்தவரென்றெண்ணிப் புறக்கணிக்க- வுங் கூடும்; 'தமக் கொத்தவரோடு இணங்காது நம்- முடன் கூடுதற்கு முயலும் இவர்தம் இச்சை யிருந்த வா றென்னே!' என்று அவரை எள்ளினும் எள்-

ளுவர். அந்தோ! அவர்நிலை யிருந்தவா றென்னே! அவர் மதிக்கும் அப் பெரியாரினுஞ் சீரிய நல்லோர்குழா மொன்று உள தென்பதை அவர் அறிந்திலர் போலும். அந் நல்லோர்உறவு யாவரும் எளிதில் பெறக்கூடியதே. அவர்களைக் கண்டு, அவருடன் கலத்தற்கு வேறொருவர் உதவியோ, பொருளோ, ஒருசிறிதும் வேண்டுவதின்று. நாம் சிறிது செவி சாய்ப்போமாயின், அவர் நம்முடன் உரையாடிக் கொண்டே யிருப்பர். அத்தகைய பெரியார்தம் இருப்பிடந்தான் யாதோ வெனின், அது நம் நூல்நிலையமே யாகும்.

நூல்நிலையப் பெரியார்

நூல்நிலையப் பெரியார்தம் உறவினை விடுத்துப் புகழினையே பொருளெனப் போற்றுபவருடன் கூடி வாழ விழைந்துழல்பவர்நிலை மிக வருந்தத் தக்கதே. புகழை விரும்புமவ் வுயர்ந்தார்காற்கீழ் ஒதுங்கும் மக்கள் பித்துடையரேயொழிய வேறல்லர். நல்லோர் நூல்நிலையத் துறைய, அவர்தம் துணையைக்கோடலின்றி, மாந்தர் மிக வருந்தி வேறொருவரைத் துணைக்கோடல் என்னே? அப் புகழ்விரும்புவோரால் மக்கள் பெறக் கிடப்பது ஏதேனு முளதோ? ஒன்று மின்று. ஆனால் மாந்தர், அப் புகழ் விரும்பும் பெரியோரை நேரில் கண்டு உரையாடுதல் கூடும். அங்ஙனம் நூல்நிலையப் பெரியாரை நேரிற் கண்டு உரையாடுதல் இயலாது. இக் குறை யொன்றொழிய வேறு எல்லாவகையிலும் நூல்வடிவாய்

விளங்கும் பெரியார் ஏனைய பெரியாரினுஞ் சீரிய ராவார்.

எல்லா வகையிலும் நம்மினுஞ் சிறந்த ஒருவர் சொற்பொழிவொன்று நிகழ்த்துங்கால், அவர்தம் சீரிய கூரிய தீஞ்சொல்லை நாம் திரையின் புறத்தே யிருந்து கேட்க நேருமாயின், அச் சொற்பொழிவு நிகழ்த்துவாரைக் காண்பதற்கில்லையே என்று அவ் விடத்தைவிட்டு அகலத் துணிவோமா? ஒரு நாளுந் துணியோம். உரைப்பவர் உண்மையில் நம்மினும் உயர்ந்தவராயின், அவர்கூற்றை யாண்டிருந்தா-யினுங் கேட்கச் சமைவோம்.

உயிரோடிருக்கும் ஒருவர், நிகழுஞ் செய்தியைப் பற்றி இன்ப முண்டாகும்படி பேசினல் மக்கள் அனைவரும் அதனைக் கேட்கவிரும்புவர். அவர், தாம் கூறுமவற்றை எழுத்தில் அமைப்பாராயின் அஃது அவர் சொற்பொழிவினும் பன்மடங்கு இன்பம் பயக்கு மென்பதில் ஐயமின்று. பத்திரிகைகளும் இதுபோன்றே இன்பந்தர வல்லன. அறிஞர்களால் மிக்க விரைவுடன் எழுதப்படும் இவை உலக சம்-பந்தமான பல விடயங்களைப்பற்றிப் பலர்க்கும் அறிவிப்பன வாகையால், இவற்றின் பயன்களை மறுப்பார் இலர்.

**நூல்**

நூல்களுள் நன்னூல்கள்—பொழுதைப் போக்கும் நன்னூல்களெனவும், எக் காலத்தும் பெரும் பய னளிக்கும் நன்னூல்களெனவும் இரு பெரும்

பிரிவுகளாகப் பிரிக்கப்படும். இதுபோன்றே, தீய நூல்களும்—பொழுதைப் போக்குந் தீய நூல்களெனவும், எக்காலத்தும் தீங்கினையே விளைக்கும் இழிந்த நூல்களெனவும் இருவகைப்படும். அத் தீய நூல்களைப்பற்றி ஈண்டு நாம் பேசவேண்டா.

பொழுதைப் போக்கும் நன்னூல்கள் இன்பந்தர வல்லனவாய அறிஞரின் வார்த்தைகளாகும். அவைகள், மக்கள் அறிய வேண்டியவற்றையே அறிவிப்பன வாகும். நுண்ணிய மதியுடைய நண்பன்றன் இன்னுரை போன்று அவை இனிக்கு மியல்புடையன. அத்தகைய நூல்களை நமக்குத் தந்துதவிய அறிஞர்க்கு நாம் என்றுங் கடமைப்பட்டுள்ளோம். அந் நூல்களை நாம் எம்முறையில் பயின்று பயனைப் பெறுவதென்பதை உணரோமாயின், அது நமது பெருங்குறையே யாகும்.

நம் நண்பர் ஒருவரது திருபம் படிக்கும்போது இன்பத்தைப் பயக்கலாம். அவ்வின்பம் ஒரு நாளை யின்பமே. அக் கடிதம் மறுநாள் அதே யின்பத்தைத் தருவதின்று. ஆகையால், நாம் அதனைப் பத்திரப்படுத்தி வைப்பதில்லை. உணவருந்திய பின்னரும், ஓய்ந்திருக்கும் பொழுதும் பத்திரிகை படித்தல் முக்கிய மென்னலாம். ஆனல், அதனையே யாரும் நாள்முழுதும் படிப்பதில்லை. நாவல்கள் எனத் தற்காலத்தில் உலவிவரும் நூல்கள் நடந்த செய்திகளை மிக்க அழகு பெற அறிவிப்பினும், நாம் அவற்றை ஒருமுறை படித்து ஓய்வடைகின்றோம். அவற்றையே மறுமுறை படிக்கில், நாம் ஒரு சிறிதும்

இன்பம் அடைகின்றோமில்லை. ஆகவே அவைகளெல்லாம் இன்பமாகப் பொழுதைப் போக்குதற்குப் பெருந்துணை புரியினும், உண்மையில் நூல்கள் எனக் கற்றோரால் கருதப்படுவன அல்ல.

ஒருவர் பேசும் பேச்சினை நூலென்று சொல்லுதற் கில்லை. ஒருவரால் எழுதப்பட்டதே நூலாக மதிக்கப் படும். பயில்வோர்க்கு ஒரு முறை இன்பத்தைப் பயந்து, மறுமுறை சுவை யற்றிருப்பது நூலன்று. பயிலுந்தோறும் மனக்கினிய பான்மைத்தாயும், தோண்டுந்தோறும் ஊற்றின்கண் புது நீர் சுரத்தல்போன்று புதுச்சுவை தோன்றும் இயல்பிற்றாயும் ஒளிர்வதே நூலெனப்படும். இத்தகைய நூல்கள் கற்குந்தோறும் மாந்தரின் கவலையை நீக்கி, அவர்தம் சிற்றுயிர்க்கு உற்ற துணையாய் நிற்குமென்பர் நுண்ணறிவாளர்.

### கற்போர் கடன்

நன்னூல்கள் பல காலத்துக் கேற்றவாறு நம் முன்னோரால் எழுதப்பட்டுள. அன்னார்திறமும், நுண்ணறிவின் சீர்மையும் நம்மால் ஆராய்தற்குரியனவல்ல. அவர்தம் பேராற்றலை, அவர் ஆக்கிய சீரிய நூல்களைக்கொண்டு ஒருவா றறிந்து வியத்தல் கூடும். சிறந்த நூல்களை இயற்றியவரே உலகினை உய்விக்கும் பெருந்தகையாளர். இம் மாண்புடையார் யாத்த பல்வகைப்பட்ட நூல்களுள் நமக்குரிய நூல்களைத் தேர்ந்தெடுப்பதே நம்முடைய கடன். கல்வி கரை யில; கற்பவர் நாள் சில. இவ் விரண்டையும்

மாந்தர் தம்முட்கொண்டு, தெள்ளிதின் ஆராய்ந்து, அறிவு நூல்களையே தமக்கெனத் தேர்தல்வேண்டும்.

நம்முடன் உரையாட அரசர்களும் அரசி-களும் வீற்றிருக்க, அவர்களை விடுத்து, நாம் நமது வீட்டுப் பணிப்பெண்ணுடன் உரையாட விரும்பு-வோமா? அதுபோல் அறிவுநூல் தந்த பெரியார்-குழுவைப் புறக்கணித்து, ஏனைய புல்லிய மக்களை விரும்புதல் அறிவின்பாற் படுமா? சீரிய நூல்களை நமக்குதவிய அவ் விழுமியோரை நாம் விரும்பும்-போது அடைதல் கூடும். நாம் ஒருமுறை அவர்-உறவைப் பெற்றபின், என்றும் அவரால் புறக்-கணிக்கப்படோம். நாம் அவர் ஆக்கிய சீரியநூல்-களைப் பயிலுதலே அப் பெரியாருடன் அளவளாவு-தலாம். அங்ஙனம் நாம் அவர்நூலைப் பயில்-தோறும் நமக்கு விளையும் இன்பத்திற்கு அளவே இல்லை. அவர் உண்மையை யுணர்ந்த முறையை-யும், வாழ்க்கையின் தன்மையையும், இவ்வுலகின் இயற்கையையும், நாம் அவர்நூல்கள் மூலமாய் உணர்தொறும் உணர்தொறும், நம்மையே மறந்து இன்புறல் கூடும். இங்ஙனம் சிறந்த நூல்களை மக்கள் பயின்று இன்புறும் நிலையன்றோ வாழ்க்கையின் உண்மையான முன்னேற்றமாகும். இத்தகைய முன்னேற்றத்தை மக்கள் அடைதல் எங்ஙனம் என்பதைச் சிறிது ஆராய்வாம்.

அறிவுநூல் தந்த பெரியார்குழுவைச் சேர்தலே முன்னேற்றம் என்னலாம். நாம் அவரைச் சேர்-தற்குமுன்னர் அவருடைய நல்லுறவைப் பெறத்-

தகுதியுடையோமா என்பதை அறிதல் வேண்டும். அவருறவைப் பெற விரும்பின், நம்பால் உளதாய பேதைமையை அகற்றி, நடுநிலைமையை உட்கொண்டு, பொய்யெனும் பேய்வயப்படாது, சீரிய குணங்களால் நாம் முதலில் உயர்தல் வேண்டும். அங்ஙனம் உயர்ந்தபின்னரே, நாம் அப் பெரியாரோடு கலத்தற்கு இயலும். கலந்து அவரோடு உரையாடி அவரை அறிய வேண்டுமாயின், நாம் சிறந்த அறிவினைப் பெறுதல் வேண்டும். இவ் வறிவினைப் பெற்றபின்னரே, நாம் அவர்கருத்துக்களை நன்கு அறிதற்கியலும். நாம் அவரோடு கலத்தற்குரிய சிறந்த அறிவினைப்பெற்றிலமாயின், அவரை அறிய விரும்பி முயலும் நம் முயற்சிகள் யாவும் வீணே. நாம் நமது சிறந்த அறிவினால் அப் பெரியார்உறவைப் பெற்றபின், அவர்பால் கற்க விரும்புதல் வேண்டும்; அகந்தை யகற்றி, ஆசிரியர்அடி யமர்ந்து கற்கும் மாணாக்கனேபோல் அவர்பால் கற்றல் மிக்க பயனுடைத்து: இங்குக் கற்றல் என்பது அப் பெரியார் நூலைப் பயிலுதலேயாம்.

## நூல் பயில் பான்மை

நாம் நூல்களைப் பயிலுங்காலை, நூலாசிரியர் இதயத்துட் புகுதல் வேண்டும். அங்ஙனம் அவரிதயத்துட் புகுந்த பின்னரே, அவர் அமைத்த கருத்துக்களை முற்றிலுங் கொண்டு, அவர் நூலின் முடிந்த பொருளை அறிந்து இன்புறுதல் கூடும். ஆசிரியர் அமைத்த கருத்துக்களை அறிதலின்றி, நமது கருத்-

துக்களை நாம் அங்குக் காணுதல் நூல் பயில் முறை அன்று.

நூலாசிரியர் விழுமிய புலமையெய்தியவராயின், அவர்கருத்துக்கள் யாவும், ஒருமுறை நாம் கற்றதும், நமக்கு நன்கு புலப்படா. அவர்கருத்துக்கள் மிக்க ஆழமுடையனவா யமையும் பான்மைய. விலையுயர்ந்த மணிகள் கடலுள் ஆழ்ந்து கிடக்கின்றன. அவற்றைப்பெற விரும்புவோர் கடலில் ஆழ்ந்து குளித்தாலன்றி அவை அகப்படா. அதுபோலவே சிறந்த கருத்துக்களை நாம் பெற விரும்பின், நூலுள் ஆழ்ந்தே செல்லுதல் வேண்டும். நம் முன்னோர் நூற்கடல் உயர்பொருளாம் மணிகளைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றது. வருந்தி, அக்கடலுள் ஆழ்ந்து குளிப்பவரே அரும்பயன் பெறுவராவர். ஆழமுடைய நம் ஆன்றோர்கவிகளை நாம் ஆழ்ந்து பயில்தொறும் இன்பமாம் பரிசில் எய்தப்பெறுவோம். அப் பரிசில் நமது உழைப்பிற் கேற்றதாய் அமையும் என்பதில் எட்டுணையும் ஐயம் இன்று. நம் உழைப்பு மிகுமேல் ஊதியமும் மிகும்.

பூமியில் ஆழ்ந்து கிடக்கும் பொன், மின்சார வன்மையால் மலையின் உச்சிமீது கிளம்பி உலகுக்குப் பயன்படாதிருத்தற்குக் காரணம் என்? மனிதரின் முயற்சி ஒருசிறிது மின்றிப் பாதலத் துறையும் பசும்பொன் அனைத்தும் வெளிப்படுமாயின், மக்கள் பூமியைத் தோண்டுதலால் தோன்றும் வருத்தம் ஒருசிறிதும் இல்லா தொழியுமன்றோ? காலத்தின் நீட்டமும் குறுகுமன்றோ? ஆனல் இயற்-

கையின் அமைப்பு அஃதன்று. இயற்கை, மாந்தரின் உழைப்பை முன்னிட்டு, யாவராலும் போற்றி விரும்பப்படும் பொன்னைப் பூமியின் வெடிப்புக்களில் கரந்துறையச் செய்கின்றது.

சிறந்த நூல்களைக் கற்பவர் பொற்சுரங்க வுழவரை நிகர்ப்பர். பொற்சுரங்கத்தின் உழைப்பாளிகள் ஊக்கஞ் செறிந்த மனத்தினர்; உழைப்பில் மிக்க விருப்பினர். அத்தகைய உழைப்பாளிகள் பொற்சுரங்கத்தில் உழைத்தற்கு, அவர்பால் சில அருங்கருவிகள் அமைதல் வேண்டும். அவர்க்குத் தரையினைத் தகர்க்கும் இருதலைக் குந்தாலி **(Pickaxe)** என்னும் இருப்புக் கருவியும், தகர்ந்த மண்ணை வாருங்கருவியாம் சுளுகுப்பாரையும்**(Showel)** இன்றியமையாதனவாகும். அவர்கள் இத்துணைக் கருவிகளைக்கொண்டு நாடோறும் சலிப்புச் சிறிதேனு மின்றி வன்பாறைகளை வருந்திப் பிளப்பர்; மண்கட்டிகளைக் களைந்து எறிவர். அவர் மெய் வருத்தம் சிறிதேனும் பாரார்; உடல்நலங் கருதார்; உழைத்தலே தகுதி யென்று தம்பணி இழைப்பர்; ஊக்கத்தினின்றும் ஒருசிறிதுங் குன்றார். அவர் இடைவிடாது பன்னாள் உழைத்துப் பயனைப் பெறுதொழிதலுங் கூடும். பயனைக் காணாராயினும், அவர்மனஞ் சிறிதேனுங் குன்றுவதின்று: அன்னார் மறித்தும் விடாமுயற்சியோடு தந்தொழில் புரிவர்; அங்ஙனம் பன்னாள் வருந்தியுழைத்ததன் பெரும்பயனாக, மாசொடு மிளிரும் அரும்பொன்னைக் காண்பர். அதனைக் காணும் அவர்மனம் மிக்க மகிழ்ச்சியை அடை-

யும். "முயற்சி திருவினை யாக்கும்" என்ற பெரியோர் வாக்கு ஈண்டே அறிதற்பாற்று.

சுரங்க வுழவர் பெருமுயற்சியால் ஈட்டிய மாசுண்ட பொன்னைத் தோயங்கொடு மண்ணிய பின்னரே, அப் பொன் விண்ணின் சூரியன் கண்ணும் மழுங்குமாறு ஒளிவிட்டு மிளிரும். இஃதே பொன் பெறும் விதமாகும்.

நூலினைக் கற்போரும் சுரங்க வுழவரைப் போன்று மிக்க வூக்கமுடையவரா யிருத்தல்வேண்டும். அவர்க்கு இருதலைக் குந்தாலிபோல் உதவுவன அவர்தம் கூரிய மதியும், சீரிய கல்வியும், நேரிய கவனமுமாம். இத்தகைய துணைக்கருவிகொடு நூலாசிரியர்சொற்களாகிய கற்களைத் தகர்த்து, அவர்கருத் தாகிய அரும்பொன்னைப் பெற்று, அதனை ஆன்மவுலையிற் பெய்து, சிந்தனை யென்னுஞ் செந்தீயா லுருக்க, அது முன்னிலும் பன்மடங்கு துலங்கித் தோன்றும். மாற்றறியாத இத்தகைய செழுஞ்சுடர்ப்பொன் ஒரு குன்றியளவு திரள்வதற்கு இத்துணை யுழைப்பு இன்றியமையாததாகும்.

### மொழியின் திறம்

கற்பவர் முதன்மையாகவுங் கடனாகவுங் கொள்ளப்படுவது மொழியின் திறத்தை நன்குணர்தலே. மொழிகளை மிக ஆழ்ந்து நோக்கி, அவைகளின் பொருளை நன் குணர்ந்தபின்னரே, கவியினுடைய கவிகளைக் கற்றலாகும். பண்டைக்காலத்து மக்கள் ஆசிரியர்பால் நூல்பயில் காலை, நூல்களை எழுத்-

தெண்ணிப் படித்ததாகச் சொல்வ துண்டு. அவர் கருத்து யாதோ எனின், சொற்களின் பல திறப் பட்ட பொருள்களைச் செவ்விதின் உணர்ந்து, அவைகளை ஏற்ற பெற்றி கொள்ளுதலேயாம். இங்ஙனம் பயில்வோர் நூலின் கருத்தைச் செவ் விதின் உணர்வர். அவர்க்கே நூலின்கண் புலமை-யும் மிகும். நூல்கள் யாவற்றையும் இவ்வாறே கற்றல் வேண்டும்.

புலமையில் திகழ்ந்த நம் முன்னோர் அனைவரும் மொழிகளின் திறத்தை நன்குணர்ந்தே நூல்களைப் பயின்றவராவர். கல்வியிற் சிறந்த கம்பர், திருவள்ளுவர் முதலிய பெரும்புலவர்களின் கவிகளை நாம் நன்கு ஆராய்வோமாயின், அப் பெரியோர் கல்வி பயின்ற பான்மை நன்கு விளக்கமுறும். ஒருவர் எத்துணைப் புலமை வாய்ந்திருப்பினும், அச் சீரியர்கவிகளில் ஓரெழுத்தினையாவது, ஒரு பதத்தினையாவது கூட்-டவோ குறைக்கவோ இயலாது. அச் சீரிய கவிஞர், மொழிகளின் திறத்தை நன்குணர்ந்தவராகையால், அவர் கவிகள் சொற்குற்றம், பொருட்குற்றம் முதலியவை தீர்ந்து விளங்கக் காண்கின்றோம்.

பண்டைக் காலத்தில், நிகண்டு முதலிய நூல்கள் நம் நாட்டில் நிலவிவந்தன. அக்காலத்-தில் கல்விகற்றோர், நிகண்டு முதலிய நூல்களை ஓதி உணர்ந்தபின்னரே, தமிழ் இலக்கண இலக்-கியங்களைப் பயிலத் தலைப்பட்டனர். இதனால், கற்பவர் மொழிகளின் பல்வகைப் பொருள்களை

நன்கு அறிதலையே முதன்மையாகக் கொண்டனர் என்பது போதரும். மொழிகளின் பல்திறப்பட்ட பொருள்களை நன்குணர்ந்து, அவைகளை ஏற்ற பெற்றி கொள்ளுதலே கற்போர்கடனாகும்.

**கற்றவரும் கல்லாதவரும்**

ஒருவர் தமது நீண்ட ஆயுட்காலத்தில் எண்ணிறந்த நூல்களை ஓதியிருப்பினும், அறவே கல்லாதவரெனக் கருதப்படுதலுங் கூடும். மற்றொருவர் ஒரு நூலின்கண் சிலபகுதிகளையே செவ்விதின் ஆராய்ந்து எழுத்தெண்ணி ஓதி உணர்வாராயின், அவரே உண்மையில் கற்றவரென்று கருதப் படுவார். எண்ணிறந்த நூல்களை ஒருவர் கற்றிருந்தும், நூல்களைப் பயிலும் முறையில் பயிலத் தவறுதலானும், அவர் பயின்ற பான்மை அவர்க்கேயாதொரு பயனையும் விளக்காமையானும் கல்லாதவராவார். ஒருவர் ஒரு நூலின்கண் சிலபகுதிகளையே கற்கு முறையில் கற்பதனால், கற்றவரென்று கருதப்படுவார்.

நாம் ஆழ்ந்து படித்தாலன்றி நூலின்கண் சிறந்த புலமையை எய்துதல் அரிது. நூலிற்குப் பத்தழகினைப் பகர்ந்த பவணந்தி முனிவர் ஆழமுடைத்தாதல் என்பதை அப் பத்தினுள் ஒன்றாகப் பகர்ந்துள்ளார். ஆகவே, சிறந்த நூல்கள் ஆழ்ந்த கருத்துக்களைத் தம்முட் கொண்டிருத்தல் வேண்டுமென்பது பெறப்பட்டது. ஆழ்ந்துள்ள பொருளைப் பெறவேண்டுமாயின், நாம் நூலுள் ஆழ்ந்தன்றோ செல்லுதல் வேண்டும்? கற்போர் நூலுள் அங்ஙனம்

ஆழ்ந்து செல்லாராயின், அவர் எங்ஙனம் புலமை எய்துதல் கூடும்?

கல்வியாளர் என்பவர் பலமொழிகளைப் பயின்-றிருத்தல் வேண்டுமென்பதில்லை; பல மொழிகளில் ஒருவர் திறனுடன் பேசுதலும் அவர் கல்வியாளர் என்பதை உணர்த்தாது. கல்வியாளர் கற்றது சிறி-தெனினும், செவ்விதின் பயின்ற பான்மையால் தெளிவினைப் பெறுவர்; அவர் தமக்குத் தெரிந்-தவை யாவற்றிலும் நிலைத்த அறிவினைப் பெற்றவ-ராவர். அவர் சொற்களின் திறனை நன்கு ஓர்ந்-தவராகையால், அவைகளை நயம்பட உரைத்தல் கூடும்.

சொற்களும் வமிசாவளி யுடையன வாகை-யால், அவைகள் ஆதியில் எவ்வாறிருந்தன என்-பதையும், பின்னர், காலத்திற் கேற்றவாறு எவ்-வித மாறுதல் அடைந்தன என்பதையும், அயல் மொழியை மணந்து, அவற்றினைத் தம்மகப்படுத்திய பான்மையையும், கற்போர் நன்கறிதல் வேண்டும். ஒருவனே காரிய நிமித்தம் பல துறைகளிற் பல்-வகைப் பெற்றியைப் படைத்தல்போன்று, பதங்-களும் பல்வேறிடங்களில் பல்வகைப்பொருளைப் பயந்து நிற்கின்றன. ஆகையால், நம் முன்னோர் கவிகளை நன்குணர்தற்கு மொழியின் பயிற்சியில் நாம் முந்துதல் வேண்டும். மொழியின் பயிற்சி இல்லாத ஒருசிலர் செய்யுட்களின் பொருளை நன்-குணராது, அவைகளை மனனஞ்செய்து, பிறரறியப் பிழைபடக் கூறி, தம் அறியாமையைத் தாமே

அறிவிப்பர். கல்லாதவர் என்று ஒருவரைக் காட்டு-வது அவருரைக்கும் மொழிகளேயாம்; கல்வியாளர் என்று அறிவிப்பதும் அவர் கூறும் அறிவு நிரம்-பிய மொழிகளேயாம்.

## சொற்களும் அவற்றின் ஆட்சியும்

கல்வியாளர் மொழிகளை நன்கு தேர்ந்து, அவைகளைப் பொருத்தமுறப் புணர்த்திப் பேசுவர். அவர் கூறுஞ் சொற்கள் நிறையி லிட்டு நிறுக்கப் பட்டனபோல் விளங்கும். அவர் மொழிகள் சில-வாயினும் மிக்க ஆற்றலுடையன. நன்கு ஆயப் பெறாத பல்லாயிரம் பதங்கள் அவர்தம் சில்வகைச் சொற்கள் பயக்கும் விழுமிய பொருளைப் பயப்பன வாகா. ஆய்ந்து அமைக்கப் பெறாத பதங்கள் பெருந் தீங்கினை விளைக்கும்.

சில பதங்கள் பச்சோந்தியின் தோலைப் போர்த்தனவா யுள்ளன. அவைகள் இடபேதத்தால் பல்வகைப்பட்ட பொருளைப் பயப்பனவாகும். பதங்களை இலயம்படப் புணர்த்தி யமைக்கும் ஆற்ற-லால், அவைகள் இரு திறப்பட்ட பொருள்களைப் பயத்தலும் உண்டு.

"இந்திரன் சசியைப்பெற்றான் இருமூன்றுவதனத்தோன் தன்
தந்தையும் உமையைப் பெற்றான் தாமரைச் செங்கணனும்
செந்திருமகளைப் பெற்றான் சீதையைப் பெற்றாய் நீயும்
அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கில்லை உனக்கே ஐயா"

என்று சூர்ப்பணகை தன் அண்ணன் இராவ-ணன் சீதைபால் காதல்கொள்ளுமாறு கூறுங்

கவியின் ஈற்றடியை, 'அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கிலை, உனக்கே ஐயா' எனப் பிரித்து, 'முடிவாகப் பார்த்தால், அம்மூவர்க்கும் நன்மை இல்லை, உனக்கே நன்மை உண்டு' என்றும், அதனையே, 'அந்தரம் பார்க்கின் நன்மையவர்க்கு, இலை யுனக்கே ஐயா' எனப் பிரித்து நோக்குழி, 'முடிவாகப் பார்த்தால், அம் மூவர்க்கும் நன்மை உண்டு, உனக்கு நன்மையே இல்லை' என்றும், இவ் விரண்டு விதமாகப் பொருள்படுவது ஈண்டு அறிந்து இன்புறற்பாலதாகும். இதனையே 'இரட்டுற மொழிதல்' என்னும் உத்தி என்ப. கல்வியிற் பெரிய கம்பர் அனைய புலவர்களே இவ்வண்ணம் மொழிகளைக் கவிகளில் புணர்க்க வல்லர்.

கல்விகற்போர் நூலைப் பயிலும்போது, அதிலுள்ள பதங்களின் பொருள் ஐயத்திற்கு இடனாயின், உடனே விரைந்து மேற்செல்லாமல் ஊக்கமும் பொறுமையும் உடையவராய்த் தற்காலத்துச் சிறந்துள்ள அகராதிகளைப் பார்த்து, அப் பதங்களின் உண்மைப்பொருளை அறிதல் வேண்டும். இங்ஙனம் வருந்திக் கற்றல், தொடக்கத்தில் சிறிது துன்பமாயினும், இறுதியில் ஈறிலா இன்பத்தையே ஈயவல்லது. இதனானன்றோ குமரகுருபரரும்,

"தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங் கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது"

என்றார்.

**கவியாராய்ச்சி**

நம் முன்னோர்கவிகளை நாம் உண்மைமுறையில் பயில்வதனால் எய்தப் பெறுவது ஈறிலா இன்பமே யாகும். அவ் வுண்மைமுறை இஃதென விளங்கு தற்குக் கம்பராமாயணத்துள் யாவரும் அறிந்த ஓர் அருங் கவியை ஈண்டு ஆராய்வாம் :

"எண்ணிலா வருந்தவத்தோன் இயம்பிய சொல்
மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையீற் கனல் நுழைந்தா
லெனச் செவியிற் புகுதலோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
ஆருயிர் நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான்
கடுந்துயரம் கால வேலான்."

கோசிக முனிவன் அரக்கருடைய துன்பத்தால் வருந்தி, அவரை அழித்தலின் நிமித்தம் தயரதனைக் குறுகினான். தயரதன் அவற்குப் பல்வகை யுபசாரங்களைப் புரிந்து, "யான் தமக்குச் செய்யும் பணி யாதோ?" எனப் பணிந்து கேட்டான். அதற்கு அம் முனி, தனக்கு அரக்கர் செய்யும் பெருந் தீங்கினைக் கூறி, அக் கொடியவரை யழித்தற்குத் தயரதனுடைய மூத்தகுமாரனே உரியவன் என்று உரைத்து அவனைத் தன்னுடன் காட்டிற்கு அனுப்புமாறு தயரதனைக் கேட்டான். அம் முனி கூறியதைக் கேட்ட தயரதன் மிக வருந்தினான் என்பதே நாம் எடுத்துக் கொண்ட கவியின் கருத்தாகும்.

இராமன் தயரதனுக்குக் கண்ணினுஞ் சிறந்தவன்; உயிரினும் உயர்ந்தவன். தயரதன் நஞ்சும் அஞ்சிலன்; முனியின் வெஞ்சொல் அஞ்சினன். தந்தைக்கு மூத்தமகனிடத்தும், தாய்க்கு இளைய மகனிடத்தும் அன்பு மிக்கிருத்தல் உலகில் இயற்கை என்பர்.

'நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி' என்ற கோசிகன்மாற்றம் மன்னனைப் பெருந்துன்பத்திற் கிரையாக்கியது. தயரதன் அடைந்த துன்பத்திற்குக் கம்பர் கூறும் உவமை பிறரால் மாற்றறற்கரியது.

இவ்வுலகின் அழகினை ஒரு சிறிதும் கண்டறியாத பிறவிக்குருடனுக் குண்டாகுந் துயர் சிறிதே. கண்க ளில்லாமையான் காட்சியின்பம் இன்னதென் றறியாத அவன், தனக்குக் கண்கள் இல்லையே என்று வருந்துதல் ஒரோ வழியேயாம். அப் பிறவிக்குருடனே தெய்விகமாகக் கண்களைப் பெற்று இவ்வுலகஅழகை அனுபவித்துக் கொண்டிருக்குஞ் செவ்வியினிடையே கண்களை யிழப்பானாயின், அவன் நுகர்ந்த நலத்தின் அளவை முழுதும் உணர்ந்து, பெரிதும் வருந்துவான்.

தயரதன் பல்லாண்டுகளாகப் புத்திரப்பேறின்றி யிருந்த நிலை, பிறவிக்குருடன் தன்மையைப் போன்றதாம். உடலிற்கு அழகினைச் செய்வன கண்களே. அவைபோன்று ஒருவனுடைய இல்லற வாழ்க்கைக்குப் பொலிவினைத் தருவது மக்கட் பேறே. மக்கட்பே றின்மை தயரதனுக்கு ஒரு

பெருங் குறையாய் நின்றது. பின்னர், அம் மன்னன் மக்களைப் பெற்றது பிறவிக் குருடன் தெய்விகமாகக் கண்களைப் பெற்ற தன்மையைப் போன்றதாம். இறைவன் இன்னருளால் மக்களைப் பெற்று அம் மன்னன் மகிழ்ந்துறையும் நாளில், கோசிகன் அம் மக்களுள் தன் உயிரினுஞ் சிறந்த இராமனைப் பறித் தேக நினைப்பானாயின், தயரதன்வேதனையைக் கண்ணிலான் கண்களைப் பெற்றிழந்ததற்கன்றி, வேறு எதற்கு உவமிப்பது?

நாம் எடுத்துக்கொண்ட கவியின் முதலடியின் 'எண்ணிலா வருந்தவத்தோன்' என்ற சொற்றொடரைச் சிறிது ஆராய்வோம்: 'எண்ணிலா அருந் தவத்தோன்' என்றது கோசிகனைக் குறிப்பதாகும். எண் என்பது அளவினைக் குறிக்கும் ஒரு சொல். கோசிகன் மனவுறுதி கொண்டு அளவில்லாத சிறந்த தவம் இயற்றியவனாதலால் அவனைக் கம்பர், 'எண்ணிலா அருந்தவத்தோன்' என்றார். இதனையே 'எண் நிலா அருந்தவத்தோன்' எனப்பிரித்து, ஒருவரது மன ஆராய்ச்சிக்கு அடங்காத அருமையாகிய தவத்தினை யுடையவன் எனவும் பொருள் கொள்ளலாம். இன்னும், 'எண் நிலாவு அருந்தவத்தோன்' எனப் பிரித்து, பெரியோரது எண்ணத்தில் நிலை பெற்ற அருமையாகிய தவத்தினை யுடையோன் என்றுங் கூறுவர். மற்றும், இச் சொற்றொடர்க்கே, 'எண்ணில்' என்பதற்கு ஆராய்வுழி என்றுபொருள் கூறி, பிறகு 'ஆ' எனப் பிரித்து, 'ஆ வருந் தவத்தோன்' என்பதற்கு, பசுவின் காரணமாக வந்த

தவத்தினை உடையவன் என்றும் பொருள் கொள்ளுதல் கூடும். கோசிகன் ஆவின் காரணமாகத் தவத்தை மேற்கொண்ட கதையை நோக்குவோம்:

காதியின் புதல்வனாகிய கோசிகன் செங்கோலோச்சி வருநாளில், ஒருநாள் வேட்டைமேல் விருப்புடையனாய்த் தன் பரிவாரங்களோடு காட்டிடைச் சென்றான். அவன் ஆங்கொருபால் வசிட்டனது இருக்கையைக் கண்டு அதனை அணுகினான். மன்னவனைக் கண்ட வசிட்டன் அவற்குச் செய்யவேண்டிய கடன்களை ஆற்றி அவனை அமரச் செய்தான். மன்னவன் ஆங்கிருந்துழி, வசிட்டன் தன் காமதேனுவை விளித்து, "நீயே சுரந்தருள் அமிர்தம்" என்ன, அச் சுரபியும், அறுசுவைத்தாய உண்டியை அளித்தது; நறுமலர்த் தாரும் வாசக் கலவையும் நல்கியது. காமதேனு அளித்த உணவினை மன்னவன் தன் சேனையோடு உண்டு களித்தான். கோசிகனுக்கு வசிட்டன்பால் நன்றியறிதல் என்னும் நல்லெண்ணம் தோன்றாமல், பொறாமையென்றும் தீக்குணம் பிறந்தது. உடனே, அவன் வசிட்டனை நோக்கி, "மாதவ, நீ உனது இடத்தை விட்டு எழாதிருக்க, உன்னிடமுள்ள காமதேனு எனக்கும் என் சேனைக்கும் அறுசுவைத்தாய வுண்டியை அளித்தது. செழுமறை தெரிந்த மேலோர், மேன்மையாகிய பொருள்கள் யாவும் வேந்தர்க்கே உரிய என்ப. இச் சுரபி நிற்குரியதன்று. எனக்கு அதனைக் கொடுத்தருள்வாய்" என்றான்.

கோசிகன் கூறியதைக் கேட்ட வசிட்டன் "யானோ மரவுரி யுடையவன்: இக் கறவையை நினக்குக் கொடுக்கும் ஆற்றல் உடையே னல்லேன்; அப் பசு வருவதாயின், நீ அதனை யழைத்தேகுவாய்" என்றான். அதனைக் கேட்ட மன்னவன் களித்து அக் காமதேனுவைப் பிணிக்க, அது வசிட்டனை நோக்கி, "கோசிகற்கு என்னைக் கொடுத்தனையோ?" என்றது. அதற்கு வசிட்டன், "யான் நின்னைக் கொடுத்திலேன்; மன்னவன் தானே நின்னைப் பற்றினான்" என்று கூற, அப் பசு பெருஞ்சினங் கொண்டு, "மன்னவன் சேனையை யானே இன்று அழிப்பல்" என்று தன் உடல்மயிரைச் சிலிர்க்க, அப் பசுவின் உடலின்கண் பல்வகைச் சேனைகள் ஆயுதங்களுடன் தோன்றி அரசன்சேனையை அழித்து நின்றன.

சேனைகள் அழிதலும், கோசிகன் குமாரர்கள் நூற்றுவரும் தந்தையின் சேனைகள் அழிதலுக்கு வசிட்டன்தன் வஞ்சமே காரணம் என்றெண்ணி, அம் முனிபுங்கவன் தலையினை அரிதற்கு எதிர்த்தனர். எதிர்த்தாரை வசிட்டன் நெருப்பெழும்படி விழித்து நோக்க, மன்னவன் தனயர்கள் அனைவரும் மடிந்தனர்.

மக்கள் மாண்டதைக் கண்ட மன்னவன் மனமழிந்து வசிட்டன்மீது தனது வில்லினை வளைத்தான். உடனே மாதவனும் தன் கைத்தண்டினை நோக்கி, "நீ எதிர்த்திடுக" என்றான். இருவர்க்கும் பெரும் போர் நடந்தது. கோசிகன் ஏவிய பாணங்கள்

யாவற்றையும் முனிவன்தண்டம் விழுங்கி விளங்கியது. விட்ட படைகள் யாவும் பயனற்றுப் போனமையான், மன்னவன் மேருவில்லியாகிய சிவனை வணங்கி வழுத்த, சிவன் வன்மையுற்ற படையொன் றளித்தான். அதுவும் பயனற்றுக் கழிந்தது. அதனைக் கண்ட கோசிகன், 'கலைமறை முனிவரின் திண்திறல் வலியும் தேசும் சீரிய!' என்று வியந்து, 'இம் மண்டலத்தை யாளும் வல்லமை சிறந்ததன்று' என்றெண்ணி, தவம் புரிதலில் விருப்பமுற்றவனாய் இந்திரதிக்காகிய கீழ்த்திசையை அடைந்தான்.

இச் சரிதையை உணர்ந்தாலன்றி, 'எண்ணிலா வருந் தவத்தோன்' என்ற அச் சொற்றொடரை, 'எண்ணில் ஆ வருந் தவத்தோன்' என்று பிரித்து, 'ஆராய்வுழி, பசுவின் காரணமாய் வந்த தவத்தினையுடையவன்' என்று பொருள் கொள்வதற் கியலாது.

தவத்தா லுயர்ந்த கோசிகன்றன் வார்த்தையைக் கம்பர் கொள்ளிக்கு உவமிக்கின்றார், அவ் வார்த்தை தயரதனுக்குச் சுடு சொல்லாகையான். 'மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழை' என்ற அச் சொற்றொடரை ஆராய்வோம்:

மர்மம் என்கின்ற ஆரியச் சொல் தமிழில் மருமம் என்றாயது. மருமம் என்பதற்கு மார்பு என்பது பொருள். 'எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழையில்' என்பதற்கு, 'பகைவன் எறிந்த வேலாயுதம் பாய்ந்த புண்ணி லுண்டான பெருந்தொளையில்' என்பது பொருள். 'கனல் நுழைந்தா லெனெ' என்ற தொடர்க்கு, 'கொள்ளி

யொன்று நுழைந்தாலொத்து' என்பது பொருளாகும். 'இராமனை எனக்குத் தா' என்ற கோசிகன் சொல்லாகிய கொள்ளி, இயல்பாகவே எறிவேல் பாய்ந்த தயரதன்றன் பசும்புண்ணில் நுழைந்து அவனுக்குப் பெருந்துயரினை விளைத்து நின்றது. கோசிகன்சொல் சுடுவதற்கு முன்னர், தயரதனுக்கு ஏற்பட்டிருந்த பசும்புண் யாது என நாம் அறிதல் வேண்டும். தன் அருமை மகன் இராமனுக்கு எப்பொழுது என்ன தீங்கு நேருமோ என்று தயரதன் மிக்க அன்பினால் கவலையுற்றிருந்த நிலையைச் சிலர் 'புண்' என்பர். அந்நிலையைப் புண் என்று கொண்டு கோசிகன் சொன்னது புண்ணிற் புளியிட்டதுபோல் வருத்தத்தின்மேல் வருத்தத்தை விளைத்தது என்பர். அவ்வுரை பொருத்தமுடையதாய்த் தோன்றவில்லை. கம்பர், 'எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழை' எனப் புழைக்குப் பல அடைமொழிகளை அடுக்கிக் கூறியுள்ளதை நாம் நன்கு கவனித்தல் வேண்டும். அவர், 'புண்ணில் கனல் நுழைந்தால் என' என்று கூறியிருக்கலாம். அங்ஙனமின்றி, 'புண்ணிலாம் பெரும் புழை' யென்றார். 'பெரும்' என்ற பதத்திற்கு அவர் கருதும் உண்மையான பொருள்தான் யாதோ? 'வேல் பாய்ந்த' என்ற வேறோர் அடையும் பெய்தனர். அதனுடன் விடுக்காது, 'எறி' என்னும் பதத்தை வேலுக்கு அடையாக்கி, 'எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழை' என்றார். இச்சொற்றொடரில் கம்பர் ஒரு சிறு சரித்திரக் குறிப்பை அடக்கிப் போந்தார். அஃதாவது :

சலபோசன் மகன் சுரோசனன் அந்தகராய தன் இருமுது குரவர்க்குக் களைப்பின் காரணமாய்த் தோன்றிய நாவறட்சியைப் போக்குவான் வாய் குறுகிய பாத்திரமொன்றைக் கையகத்தேந்தி, மரங்களாற் சூழப்பெற்ற ஒரு தடாகத்திற்குச் சென்று தண்ணீர் மொண்டுகொண்டிருந்தான். அத்தறுவாயில் தயரதன் வேட்டைமேற் சென்றிருந்தான். சுரோசனன் நீரை மொண்டபோது குடு குடு என்ற சப்தம் பிறந்தது. அச் சத்தம் வேட்டையாடிக்கொண்டிருந்த தயரதன் காதிற் பட்டது. உடனே அவன் அவ்வொலி வேழம் தண்ணீர்குடிப்பதனுல் உண்டாவதென்றெண்ணி, மிக்க தூரத்திலிருந்தே அவ்வொலி பிறந்த திசை நோக்கித் தனது 'சத்தவேதி' என்னும் அம்பொன்றை விட்டான். அவன் விடுத்த அவ்வம்பு சுரோசனனுக்கு மரணவேதனையைச் செய்தது. சுரோசனன் 'கோ' எனக் கதறிக் கீழே விழுந்த ஒலியைத் தயரதன் கேட்டு, ஓடிச் சென்று பார்க்குமளவில், இளைஞன் அம்பேறுண்டு இறக்கும் நிலையை எய்தலுற்றான். அதனைக் கண்ட காவலனது மனம் கலங்கியது. அறியாது செய்த வினைக்கு அரசன் மிக அழுங்கலுற்றான்.

பின்னர், தயரதன், இறக்குந் தறுவாயிலிருந்த அவ்விளைஞன் மூலமாய் அவன்றன் பெற்றோர் இருக்கை யறிந்து, அவனைத் தோள்மீது சுமந்து சென்று, அவ் வந்தகர்முன் இட்டு, நிகழ்ந்ததைக் கூறி, தான் ஓராது செய்த பிழையைப் பொறுத்தருளுமாறு அவர்களை வேண்டினன். அவ்வந்தகர்

தம் அருமந்த மகனுடைய பிரிவால் ஆருத்துய ருற்று, "நீயும் எம்மைப் போலவே மகப் பிரிவால் இறக்கக் கடவாய்" என்று தயரதனைச் சபித்து உயிர் நீத்தனர்.

சுரோசனன்றன் இருமுதுகுரவர் இட்ட சாபம் தயரதன் மனத்தை விட்டு என்றும் நீங்காத தாக, அதுபற்றி அவன், 'அப் பெரியார் சாபம் பலிக்கும் நாள் குறுகி விடுமோ!' என்று பெருங்கவலை உற்றிருந்தான். இத்தகைய பெருந் துன்பத்தைக் குறித்தே கம்பர், புழைக்கு 'எறி வேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்' என்ற அடை மொழியைப் பெய்தார். இருமுது குரவரின் சாபச் சொல்லிற்கு எறிவேல் உவமை யாயிற்று. பெரியார் சாபச் சொல் தவருது பலிக்கும் இயல்பிற்ருகையால், அதற்கு எறிவேலை உவமை யாக்கினர், சிறந்த வீரன்றன் வேல் பகைவர் மார்பில் தப்பாது குளிக்குந் தன்மையதாக லான்.

"குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயுங் காத்த லரிது"

என்ருர் வாய்மையில் வல்ல வள்ளுவரும்.

அரக்கரால் தன் மகனுக்கு அழிவு நேருமே என்ற எண்ணம் தயரதன் மனத்தில் தோன்றுங்கால் அவனுயிர் அவனை விட்டு அகலத் துணியும். தன் மகற்குக் கோசிகன் துணையாய் நிற்க, இறுதி யொன்றும் நேராது என்ற எண்ணம் அவனுள்ளத்து எழும்போது செல்லத் துணிந்த உயிர் மீளுத லுறும். இங்ஙனம் மூர்ச்சையும் தெளிவு மாகிற

நிலையில், உயிர் போகத்தொடங்குவதும் மீண்டு வருவதுமாய் அலைதல்பற்றி, 'உண்ணிலாவிய துயரம் பிடித்து உந்த ஆருயிர் நின்று ஊசலாட' என்றார்.

'கண்ணிலான் பெற்றிழந்தான் என வுழந்தான்' என்பதை முன்னரே விளக்கினோம். பிள்ளையின்றி யிருந்த சோகத்தினும் பிள்ளைபெற்று இழக்க நேர்கிற சோகம் பெரிதென்பது ஈண்டு அறியத்தக்கது.

யமன்போலப் பகைவரைத் தவறாது கொல்லும் வேல் என்பார், 'கால வேல்' என்றார். இங்ஙனம் பெருந்துய ருற்றவன், போரில் பகைவரை அஞ்சாது கொல்லும் வன்மன வீரன் என்பதைத் தெரிவிக்க வேண்டி, 'கால வேலான்' என்றார். தறுகண்மை வாய்ந்த தயரதனும் கோசிகன்றன் வன்மொழிக்கு மிக வருந்தினனாயின், 'கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என்ற பெரியார்வாக்கு எங்ஙனம் பொய்க்கும்! இவ்வளவும் நாம் அக்கவியுள் ஆழ்ந்து ஆழ்ந்து செல்ல, இனிது புலனாகும். இத்தகைய கவிகளை உள்ளத்தமைத்து, ஒருகால் நோக்கும்பொழுது, மனம் கவியழகிலே இலயப்பட, நம்மை நாமே மறந்து இன்புறும் நிலை மானிட வாழ்க்கையில் யாண்டும் காண்டலரிது.

### அறிவை வளர்க்குந் திறன்

கவியாசிரியரின் மனநிலையை உள்ளவாறு உணர முயலுதலே கவிகளைக் கற்போர்கடனாகும்.

நாம் நம்முடைய இயற்கைக் குணங்களை ஒரு-புறத்தே யொதுக்கிக் கவியாசிரியரின் மனத்தை அறிதல் வேண்டும். நாம் ஆசிரியரின் கருத்துக்களை முற்றும் கற்றலில் கருத்துடைய ராதலன்றி, நம் கொள்கைகளை நாட்டுதற்கு முயலுதல் நல மன்று. ஆனல், நாம் நன்கு ஆராய்ந்து அறிந்த-வைகளைப்பற்றி நம்முடைய கொள்கைகளை யெடுத்-துக் கூறுதல் தவருகாது. இர்ண்டுபட்ட கொள்கை-களை யுடைய செய்திகளும் உண்டு. அவைகளில் நம் கொள்கைகளை நாட்டுதலால் தீங்கொன்று மில்லை.

வஞ்சனை, பொய், பேராசை முதலிய தீய குணங்களைக் களைந்தெறிதலில் இரண்டு பட்ட கொள்கை ஒரு நாளும் இருந்ததில்லை. இத் தீய குணங்கள் நம்பால் நிகழக் காணுவோமாயின், நாம் அவைகளை உடனே வேரறக் களைந்தெறிதல் வேண் டும். அங்ஙனம் நாம் செய்யாதொழியில், அவைகள் மிக்க வன்மையோடு வேரூன்றி நமக்குப் பெருந் தீங்கினைப் புரியும் என்பதில் சிறிதும் ஐயமின்று. இத னுடன், கற்பவர் கவனிக்கற்பாலது வேருென்றும் உண்டு. எத்தகைச் செய்திகளிலும் நாம் நம்முடைய தீர்ப்பைக் கொடுத்தல் சரியன்று. சிலர், அங்ஙனம் தீர்மானித்தல் ஆராய்ச்சியுடன் கூடிய அறிவின்-பாற் படும் என்பர். அது முற்றிலும் தவருரும். பேரறிவின் பாற் படுஞ் செய்கை யாதோ வெனில், மௌனம்மேற்கொண்டு, நாளுக்கு நாள் நல்லறிவைப் பெற முயலுவதேயாம். நூலைப் பயிலும் மாந்தர் இவ்-வண்ணம் ஒழுகுவராயின், அவரே நூலாற் பெறும் விழுமிய பேற்றினைப் பெற்றவராவார்.

## அன்பு

இதுவரை மாந்தர்க் குறுதி பயப்பனவாய உண்மை நூல்கள் இவை யென்றும், அவைகளைச் செவ்விதின் பயிலும் பான்மை இஃதென்றும் தெளிவுறக் கண்டோம். இனி, உண்மை நூல்களை யோதிய கல்வியாளன் அன்பெனும் அரிவையை மணந்து, அருள் முதலிய புதல்வரைப் பெற்று, உலகிற்கு இன்பத்தைப் பெருக்குஞ் சிறந்த அரசனும் பான்மையைப் பகர்வாம்.

ஒருவன் வாழ்க்கை எனைமாட்சித் தாயினும், அன்பின் வழி நில்லாதாயின், அது மிக இழிந்த தெனக் கருதப்படும். தெய்வப்புலமைத் திருவள்ளுவரும்,

"அன்பகத் தில்லா வுயிர் வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந் தளிர்த் தற்று"

என்றார். பாலைநிலத்தில் உலர்ந்த மரம் எங்ஙனம் தளிர்த்தல் இல்லையோ, அதுபோலவே அன்பில்லாதவன் இல்லறத்தோடு கூடிப் பயனுற வாழ்தல் இல்லை யென்பது இக்குறட் பாவின் திரண்ட பொருளாம்.

இவ் வையகமுழுதும் அன்பினாலேயே இயங்குகின்றது. பகுத்தறியும் ஆற்ற லற்ற விலங்குகளும் அன்பினால் பிணிக்கப்படுகின்றன. இறைவரும் அன்பாற் பிணிக்கப் படுவரெனின், அவ்வன்பின் பெருமையைப் பேசவும் வேண்டுமோ! ஒருவர் அன்புடைமையால் இவ் வுலகில் யாவற்றையும்

தமக்கு இன்பமாகச் சாதித்துக் கொள்ளலாம்; அன்பின்மையால், அவரே தமக்கு அழிவினைத் தேடிக் கொள்ளலாம்.

அறிவுடையோர், அன்பே அருளுக்கு முதற்படி யென்பர். அன்பில்லை யாயின், ஒருவர்க்கு அருள் உதிப்பதின்று. அருளே முத்திக்கு வித்தாகும். அன்பினைத் துணைகொண்டாலன்றி வாழ்க்கையின் முடிவாகிய முத்தியை மக்கள் எய்துதல் முடியாது. அன்பிற் பழகாத ஒருவர், வாழ்க்கையில் உயர்தல் அரிது. அவர் கற்ற கல்வி யனைத்தும் காய்ந்துலர்ந்த பாறைமீது கனத்த மழை பெய்தாற் போன்றும், விழலுக் கிறைத்த நளிர்புனல் போன்றும் வீணாய்க் கழியு மென்பது ஒருதலை.

அன்பகத் தில்லாதவன் அல்லலுக்குக் காரண மாய அழுக்காறு, பிறர் பொருளை வஞ்சிக்கும் பேரவா முதலிய தீக்குணங்களாம் பேய்களுக் கிரை யாகி, அவைகள் தன்னைப் பல்லாற்றானும் அலைத்து வாட்ட, மிக வருந்தி உழல்வான். அவனே நறு மலர் பூத்து நன்மணங் கமழும் இவ் வையகமாஞ் சோலையை அழலுமிழ் பாலைவன மாக்கும் பாதகன். அவன், தன்னையும் பாழாக்கித் தன்னைச் சார்ந்தவரையும் பாழ் படுத்துவன்; முடிவாக நோக்குமிடத்து, உலகிற்கே உறுகணை விளைத்து நிற்பன்.

இவ்வுலகமாம் பூம்பொழிலில் அன்பகத்தில்லா வன்புடை மாக்கள் கொழுத்து வளர்ந்த கோரைப் புற்களாம். இவ்வற்பமாகிய புற்களை அழித்தாலன்றி

மல்லிகை முதலிய நறுமணப் பூக்களாம் மக்கள் அன்பின் வழிப்பட்டு நன்னெறியைச் சேரார். மோகமெனும் பெருங்காற்றால் மொத்துண்டலையும் மனமெனும் மரக்கலத்தின் மாலுமியாம் மனிதனை, நீள் திசை சுழன்று அலையாவண்ணம் சாந்தியென்னுஞ் சுகத்துறை சேர்ப்பது அன்பெனும் அரியதோர் கலங்கரை விளக்கமாம். இவ்விளக்கம் பெற்றவரே அருளினைப் பெறுதற்குரிய ராவர்.

சுற்றம், நட்பு என்றோராது, எல்லா வுயிர்கள்மாட்டுஞ் செல்வதாகிய உள்ளத்தின் நிகழ்ச்சியே அருளெனப்படும். இவ்வருள் அன்பினால் பண்பட்ட மனத்திற்கே உரியது. இம்மைக்கே யன்றி மறுமைக்கும் பெருந்துணையாய் நிற்பது அருளேயாம். மாந்தர் கல்வியால் உண்மையறிவினைப் பெற்று, அவ்வறிவினால் சிறந்த ஒழுக்கத்தையும் பெறுதல் கூடும். இதனுண்மையை,

"ஏகம்முதற் கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம்முதற் றிண்பணை போக்கி யருந்த வத்தின்
சாகந்தழைத் தன் பரும் பித் தரு மம் மலர்ந்து
போகக்கனி யொன்று பழுத்தது போலு மன்றே"

என்ற கம்பர் வாக்கு நன்கு விளக்கும். அயோத்திமா நகரம், கல்வி கேள்விகளுக்கு இருப்பிடமாகி, அக் கல்வியைப் பெற்றார், தவம், அன்பு, தருமம், பேரின்பம் ஆகிய இவற்றைப் பெறுதற்கிடனாகின்றது என்பது இக் கவியின் பொருள். தவம்முதல் போகம் ஈறாகவுள்ள நான்கும் கல்வியின் காரியமாய், முறையே யொன்றற் கொன்று காரணமாதல் இக் கவியான் அறியக் கிடக்கின்றது.

**ஒழுக்கம்**

கற்பன கற்று, அவற்றின் வழி நிற்றலே கல்வியாளரின் கடனாகும்.

"கற்க கசடறக் கற்பவை கற்ற பின்
நிற்க வதற்குத் தக"

என்றார் வள்ளுவரும். ஒருவன் எவ்வளவு உயர்ந்திருப்பினும், ஒழுக்கம் அவன்பா லிலதாயின், அவன் உண்மையில் வாழ்க்கையில் உயர்ந்தவனாகான். அழுக்காறாமை, அன்புடைமை, நடுநிலைமை முதலிய நல்லறங்களைப் பழகி, அவற்றின் வழி யொழுகுதலே மக்களை விலங்கினின்றும் பிரித்து உயர்த்துவதாகும். ஒழுக்கம் இம்மையில் மக்கட்கு இன்பத்தை யீந்து, மறுமையில் வீடுபேற்றினையும் தரவல்லதாகையால், மக்கள் அதனை உயிரினும் ஓம்புதல் வேண்டும்.

"ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினு மோம்பப் படும்"

என்ற பொய்யில் புலவர் பொருளுரை ஈண்டுத் தேறற்பாலதாம். 'உயிர் எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாயினும், ஒழுக்கம்போல விழுப்பந் தாராமையின், உயிரினும் ஓம்பப்படும் என்றார்' என்று அவ்வொழுக்கத்தின் பெருமையை விரிப்பர் பரிமேலழகர். ஒழுக்கத்தின் ஒல்குவான் இழிந்தவனே யாவான். அதுபற்றி யன்றே,

"பார்ப்பான்
பிறப் பொழுக்கங் குன்றக் கெடும்"

என்றார் திருவள்ளுவர். ஒருவர், குலத்தாலும் செல்-

வத்தாலும் மிகத் தாழ்ந்தவராயினும், ஒழுக்கத்தினின்றும் ஒரு சிறிதும் பிறழாராயின், அவரே உண்மையில் விழுமியோராகக் கருதப்படுவார்.

நாம் நம்நாட்டுக் காவியங்களை ஆராய்வாமாயின், அவைகளில் ஒழுக்கமே தலைசிறந்து விளங்கக் காண்போம். ஒழுக்கத்தைப்பற்றிப் பேசாத நூலே நம் நாட்டில் இல்லை யென்று கூறலாம். இதனால் நம் முன்னோர் ஒழுக்கத்தை எத்துணை உயர்வாகக் கருதினர் என்பது நன்கு விளங்கும். நம் பண்டைக் காவியங்களில் ஒழுக்கத்திற் சிறந்திலங்கும் பெரியார் பண்பினைச் சிறிது பகர்வாம்.

## இராமன்

இராமாயணத்தில், இராமபிரானுடைய ஒழுக்கத்தை நோக்கும்போது ஒருவர்க்குப் பெருவியப்பு விளையும். கைகேயி தயரதன்பால் பெற்ற வரத்தினை இராமனுக்குத் தெரிவிப்பான் வேண்டி, அவனைத் தன்பால் அழைத்துவரச் சுமந்திரனை யேவ, இராகவன் அவளாணையை யறிந்து, அவள்பா லேகிச் சென்னி மண்ணுற வணங்கிச் சிந்துரப் பவளவாயைச் செங்கையால் புதைத்து நின்றான். வந்த மைந்தனை நோக்கிய கைகேயி, “ தந்தை உன்னிடத்துச் சொல்லுமாறு மனத்துக் கருதிய மாற்றம் ஒன்றுண்டு. அஃது எனக்குத் தெரியுமாகையால், அதனை யான் சொல்வேன்” என்றாள். ‘அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்’ என்பதைத் தனக்கு அறவுரையாகக் கொண்ட ஐயன்,

"எந்தையே யேவ நீரே யுரைசெய இயைவ துண்டேல்
உய்ந்தன னடியே னென்னிற் பிறந்தவ ருளரோ வாழி
வந்ததென் தவத்தினாய வருபயன் மற்றொன் றுண்டோ
தந்தையுந் தாயும் நீரே தலைநின்றேன் பணிமின்"
என்றான்.

அங்ஙனம் அவன் மிகுந்த பக்தியோடு கூறியதைக் கேட்ட கைகேயி, "உலகமனைத்தையும் பரதனே ஆள நீ பதினான்கு வருடம் காட்டிடை வசித்து வருமாறு மன்னன் ஏவினன்" என்றாள். எப்பொழுதும் தாமரைமலரை யொப்பதாகிய இராமனது திருமுகச் செவ்வி கைகேயியின் சொல்லைக் கேட்டவுடன் அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றுநின்றது. அன்னையின் மொழியைக் கேட்டுக் களிமகிழ் வெய்திய கார்முகில் வண்ணன்,

"மன்னவன் பணியன் றாகின் நும்பணி மறுப்ப னோஎன்
பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யப்பா லிப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர்கானமின்றே போகின்றேன் விடையுங்
கொண்டேன்"

என்று கூறி, மணிமுடியின் பொலிவையும் அரியணையின் அழகையும் இழந்து, தாழிருஞ் சடைகள் தாங்கி, தாங்கருந் தவம் மேற்கொண்டு, பூ விருந்தவல்லியோடு பூழி வெங் கானம் புகுதற்குத் துணிந்தான் என்றால், அவன், பெற்றோர்பால் செலுத்திய ஒழுக்கநெறியின் விழுப்பம் என்னே!

இராமனை நாட்டையாளுதலினின்றும் நீக்கிக் காடுறை வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு பணித்த

பெற்றோர்மீது இலக்குவன் மிக்க சினங் கொண்டெழுந்த காலை, இராமன் அவனை நோக்கி, "எம்பி, யான் ஊழ்வினையால் முடி துறந்து காட்டிற்குச் செல்லுமாறு நேர்ந்ததே யொழிய, நம் பெற்றோர் எனக்குக் குற்றமொன்று மிழைத்திலர்.

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.'

ஊழை வெல்லுதல் எத்துணை வலி யுடையோர்க்கும் கூடாமையால், நீ வெகுள்வதனால் பயன் என்ன?" என்றான்.

இராமன்பால் பேரன்பு கொண்ட இலக்குவன் அதனைக் கேட்டு, "ஐய, நீ கூறும் ஊழ் என் வில்லின் வல்லமைக்குமுன் யாது செய்யக் கூடும்? உனக்குக் கைகேயி விளைத்த உறுகணை யான் உன்னுந்தோறும் என் சினந் தணிவதாயில்லை; கொதிக்கும் என் மனத்தை யான் எங்ஙனம் ஆற்றுவேன். கைகேயியின் கருத்தை முற்றுவிக்கும்படி திரிமூர்த்திகளே வரினும், அவர்களையும் வென்று, சூழ்ச்சியால் நினது முடிபுனை திருவிழாவைத் தடைசெய்த கைகேயிக்குப் புத்தி புகட்டுவேன். நீ என் விற்றொழில் காண்டி" என்றான்.

ஒழுக்கமே தனக்கோர் வடிவெனக் கொண்ட இராமபிரான், பெருத்த உலைக்களத்துள்ளே உற்ற தீயினைப்போல் மிக்க வெப்பத்தோடு பெரு மூச்செறிந்து பேசிய இலக்குவனை நோக்கி

"................ஐய நின்றன்

"வாய்தந்தன கூறுதி யோமறை தந்த நாவா
னீதந்த தன்றே நெறியோர்க ணிலாத தீன்ற
தாய்தந்தையென்று லவர்மேற்சலிக்கின்ற தென்னே!"

என்று, அவனை நல்லொழுக்கத்தினின்றும் வழுவாத வண்ணம் காத்த திறம் என்னே!

இராமன் ஒழுக்கந் தவறிய மாக்களை ஒறுத்த செய்தி இராமாயணத்தில் பல்வேறிடங்களில் பரக்கக் காணலாம். ஒழுக்கத்திற் சிறந்தோரை அவன் போற்றிய பான்மை என்னே! தாடகை, சுவாகு, வாலி, கரன் முதலியோர் ஒழுக்கத்தினின்றும் ஒல்கினமையானன்றோ குணக்குன்றேறி மிளிர்ந்த இராமனால் ஒறுக்கப்பட்டனர்? இராமன், ஒழுக்கமே துணை யெனக் கொண்ட குகன், சபரி, வீடணன் முதலிய பெரியாருடன் நேயம் பூண்டு கலந்த பான்மை மிகப் போற்றி இன்புறற் பாலதாம்.

பரதன்

பரதனுடைய ஒழுக்கநெறி எத்துணைச் சீரிய தென்பதை இராமாயணத்தைப் படிப்போர் நன்குணர்வர். ஆழி சூழ் உலகத்தை யாளுமாறு தனக்கொரு பெரு நன்மையைச் செய்த தன் தாய் கைகேயி, இராமன்பால் பெருஞ்சூழ்ச்சியைப் புரிந்தனள் என்று பரதன் அவளைப் பலவாறு வைது, அரசாளுஞ் செல்வத்தை அறவே வெறுத்து நின்ற செய்தி அவன்றன் சீரிய ஒழுக்கத்தையன்றோ விளக்குகின்றது!

பரதன் இராமன்பால் செலுத்திய அன்பின் பெருக்கம் என்னே! குகன் இராமன்பால் பேரன்-

புடையான் என்பதைச் சுமந்திரன்மூலமாய் அறிந்த பரதன், அக் குகன், தன்னைக் காண வருவதற்கு-முன்னர்த் தானே அவனைக் காண விரும்பிப் புறப்-பட்ட செய்தி யொன்றே இராமன்பால் பரதனுக்-கிருந்த விழுமிய அன்பினை விளக்குவதாகும்.

பரதனது கருத்து இன்னதென்பதை அவன்-வாய் மொழியால் அறிந்து தெளிவுற்ற குகன், மனத்தில் அடங்காப் பெரு மகிழ்ச்சி யடைந்து,

“தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினையென்றபோழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி னம்மா!”

என்று கூறியதை உணர்தொறும் உணர்தொறும் நம்முள்ளத்து ஊறும் இன்பத்திற்கு அளவே யில்லை. பரதன் இராமனைக்காட்டிலும் சீரிய ஒழுக்கம் வாய்ந்தவன் என்று ஒழுக்கத்தில் உயர்ந்த குகனே கூறுவானாயின், பரதன் ஒழுக்கத்தை என்-னென்று பகர்வது!

தவக்கோலந் தாங்கித் தன்னை வந்தடைந்த பரதனைப் பார்த்து, இராகவன், “பரத, மன்னவன் இறந்தபின் அவன் ஆணையால் உலகம் நின்னதாக, நீ தவக்கோலம் பூண்டது எற்றுக்கு?” என்று வினவ, பரதன், அண்ணனை இரு கை கூப்பி வணங்கி, “நல்லோர் மேற்கொள்ளுந் தவத்தைப் பிறப்பினால் இழிவை யடைந்த யான் பூணுதல் தகாதாயினும், ‘மூத்தவர்க் குரித் தரசெனு முறைமையின்’ தவறிய

அரசியல் யான் கொள்ளத் தக்கதன்றாகையாலும், அங்ஙனங் கொள்வேனாயின், அஃது அறம் நோக்கி யரசினைக் கவரும் பகைஞர்தொழிலா மாகையாலும் யான் இக்கோலம் கொள்ள நேர்ந்தது. ஆகையால் எந்தாய், நம் பெற்றோர் செய்த தீமைகள் நீங்கு-மாறும், உலகின் துன்பத்தைத் துடைக்குமாறும் நீ அயோத்திக்கு மீண்டு அரசாட்சி செய்தருள்வாய்" என்று வேண்டிநின்றான்.

பரதன், தனக்கு அரசினை நல்கவே வந்துளான் என்பதை யறிந்த இராமன் பரதனை நோக்கி, "சிறந்த அறிவுடையவனே; இருமுதுகுரவர்க்கு மக்கள் செய்யும் உதவி புகழ் விளைத்தலே-யன்றிப் பழி சூட்டுதலன்று; ஆகையால் கைகேயி பெற்ற வரமும் தயரதன் வாய்மையும் பழுதாகா-வண்ணம் நடத்தலன்றோ எனது கடமை? நான் கைகேயியின் வரத்தை நிறைவேற்றாமல் உலகினை ஆள்வேனாயின், அதனால் எந்தையார் பொய்யுரைத் தவராய் நரகஞ் சேர்வார்; தந்தையாரை நரகத்தி னின்றும் மீட்பதே புத்திரர்கடமையாகும். ஆகை-யால் யான் அரசு புரிதல் எவ்வாற்றானும் சரியன்று. தாய்க்கு வரமளித்த தந்தையின் மொழிப்படி அரசு நின்னதே யாகையால், நீ உலகினையாளுதல் நேரிதே யாகும்" என்றான். அதனைக் கேட்ட பரதன், "நீ கூறுமாறு நாடு எனக் குரித்தாகுமாயின், நாட்டினை யான் உனக்கு நல்குவேன்; நீ அதனைப் பெற்று ஆள்வாய்" என்றான். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்பதை நன்குணர்ந்த இராமன் தம்பியைப் பார்த்து, "யான், வன வாசஞ்

செய்யும் இப்போது உனது நாட்டினை என் வயப்படுத்துவதாக நீ கூறுதல் முறையாகுமோ? யான் தந்தையின் பணியைச் செய்யாது விடுதல் ஒழுக்க நெறிக்கு ஏற்புடைத்தாகுமோ? யான் தாய் தந்தையர் கட்டளையைத் தாங்கிய பிறகு, எங்ஙனம் உனது விருப்பத்தை முடித்தல் கூடும்? இதனை நீ நன்கு ஆய்ந்துணர்தி" என்றான். இராமன் கூறியவற்றைக் கேட்ட பரதன், "என் ஆருயிர் அண்ணலே, நீ கூறியதை யான் சம்மதிக்கின்றேன். பதினான்கு வருடம் கழிந்த பிறகு, நீ அயோத்தியை நண்ணி, உனக்குரிய அப்பூமியை அரசு புரியாவிடில், யான் தீக் குளித்து உயிரினை விடுவல். இது சரதம்" என்று சாற்றினான். அண்ணனுக்காக உயிரினையும் விடுதற்குப் பரதன் உறுதி பூண்டான் என்றால் அவன்றன் அன்பின் பெருக்கத்தை என்னென்று அறைவது!

### தருமன்

பாரதத்திலும் சிறந்த வீரர்களின் ஒழுக்கத்தை ஆங்காங்குக் காண்கின்றோம். பாண்டவர்களுள் தருமரைப் பொறையின் வடிவம் என்றும், ஒழுக்கத்தின் உருவம் என்றும் போற்றுவர்.

கண்ணன், துரியோதனாதியர்பால் தூது செல்வதற்கு முன்பு பாண்டவர் ஐவரையும் பார்த்து, "போரின்றிச் சமாதானத்தால் நாட்டினைப் பெறுதற்கு உமக்கு நினைவோ? அல்லது கொடிய வனத்திற்கே மீண்டுஞ் சென்று வறுமை யுற்று வசிக்க நினைவோ? அன்றி, பகைத்த போரில் உருத்-

தெழுந்து பொர நினைவோ? உமது நினைவு யாது?" என்று வினவினான். தருமன் போரின் தன்மையை நன்குணர்ந்தவனாகையால், சுற்றத்தோடு போர் புரிந்து அழிதலைக்காட்டிலும் சமாதானத்தால் கலந்து வாழ்தலே நலமெனக் கருதி, கண்ணனை நோக்கி, "எம் உயிர் போன்றவரே, சினமெனும் பெரு நெருப்பை மிக மூட்டி வளர்ப்போமாயின், கௌரவரும் யாமும் மூங்கிற்காடேபோல் அழிந்து படுவோம். அங்ஙனம் அழிவுறாது சந்து பட அருள் புரிவீர்" என்றான். அவன்கருத் தறிந்த கமலக் கண்ணன், "துரியோதனனோடு மறுசூதாடி வென்று, அவன் சொன்னவண்ணம் வெங்கானம் போய் மீண்டும், அக் கொடியோன் குருநாட்டில் உமக்குரிய அரைப் பங்கைக் கொடானாயின், அவனைப் போரில் வென்று அரசாள்வதன்றோ உமது கடமை" என்று போரில் ஊக்கமுண்டாமாறு தருமனைத் தூண்ட,

"குரவரையுங் கிளைஞரையுங் குலத்துரிய துணைவரையுங்
கொன்று போர்வென்று
அரவநெடுங் கடலாடை யவனியெலாந் தனியாளும்
அரசு தன்னில்
கரவுறைய மனத்தாதை முனிக்குரைத்த மொழிப்
படியே கானந் தோறும்
இரவுபகல் பலமூல சாகநுகர்ந் துயிர்வாழ்தல்
இனிது நன்றே"

என்று கூறி, சுற்றத்தின் அழிவிற்கு அவன் பெரிதும் இரங்கி நின்றான். துரியோதனன் அரக்கு-மாளிகையில் தமக்கு விளைத்த அழிவினையும் அவன் உன்னிலன்; வேத்தவையில் திரௌபதிக்குத்

துச்சாதனன் செய்த மானபங்கத்தையுங் கருதிலன். கொன்றன்ன இன்னா செய்தும் அக் கௌரவர்பால் அவன் கொண்டிருந்த அருளின் திறம் என்னே!

விராடநகரத்தில் பாண்டவர் கரந்துறைந்த காலத்து, உத்தரன், பேடி யுருவு கொண்ட பிருகந்நளை யென்னும் பார்த்தனது உதவியைப் பெற்று, நிரை மீட்பான் கௌரவர்களோடு கடும் போர் புரிந்து மீண்டு வரத் தாமதிக்க, விராடன், பேடியைத் தேரூர் பாகனாய்க் கொண்டு சென்ற மைந்தன் போரில் என்நிலை யடைந்தனனோ என்று ஏங்கியிருந்த காலை, கங்கனென மாறு பெயர் தாங்கிய தருமன், "தேரூர்ந்தவன் பேடி யாகில், உத்தரன் போரில் வென்றே வருவன்" என்று அவனைத் தேற்றினான்.

தருமன் விராடனைத் தேற்றுங் காலை, தூதுவர் அரசனை யணுகித் துரியோதனன் போரில் அழிந்தவாறும், உத்தரன் நிரை மீட்டு வென்றவாறும் விளம்பிநின்றனர். அதனைக் கேட்ட மன்னவன் மிக மகிழ்ந்து, தன் அருமந்த மகன் வருமளவும் சூதாடுமாறு தருமனை வேண்ட, அவனும் அதற்கிசைந்து ஆடினான். அங்ஙனம் அவ ராடுகையில், தருமனே வெற்றி யுற்று நிற்க, விராடன் அதனைப் பொறாதவனாய், "வென்றி-யுத்தரன்முன் மேவார் இகலழிந்தென இப்போர் அழிதி நீ யெந்தை" என்றான். அதனைக் கேட்ட தருமன், "உரக கேதனன் வன்திறல் யாவும் அழியுமாறு வென்றவன் பேடியே; நின் மகன் வெல்லு மாற்ற லுடையனோ?" என்றான். விராடன், தருமன் கூறிய-

வற்றைப் பொருதவனாய், "ஒரு பேடியைச் சிறப்பித்துச் சபையில் அரசனை மறுத்துக்கூறுதல் மறைபயில் மேலோர்க்குச் சிறிதும் ஏலாது" என்று தருமனைப் பார்த்து இடித்துரைத்தான். அங்ஙனம் விராடன் கூறியும், உண்மையை எடுத்துக் கூறுதல் மேலோர்கடன் என்று கருதிய தருமன், "மன்னவ, கன்னன், துரோணன், வீடுமன் முதலிய வில்லாளிகளை நின் சிறுவன் வெல்லும் ஆற்றலுடையனல்லன். உன் மைந்தனே நேரில் வந்து, 'வென்றவன் விசயன்' என்று விளம்புவனாயின், அப்போது நீ தெளிவினை அடைவாய்" என்றான். அங்ஙனம் தருமன் கூறியதற்குப் பொருத விராடன் தன் கையிலிருந்த கவற்றினைத் தருமன்நெற்றிமீது எற்றினன். எற்றலோடும் அக் கவறு தருமன்நெற்றியில் ஊறு செய்து உதிரத்தைப் பெருக்கியது. அவ் வமயம் ஆங்கே அருகு நின்ற திரௌபதி குருதியைக் கண்டு அஞ்சி, பெருகிய சோரி நிலத்திற்றோயாவண்ணம் மாற்றினாள். உடனே விராடனும், 'எண்ணமும் செயலும் வேறாய் என் செய்தோம்! என் செய்தோம்!!' என் றேங்கிநின்றான். பொறையையே தனக்கோ ரணியெனப் பூண்ட தருமன்,

> "இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
> புணரின் வெகுளாமை நன்று"

என்ற அறவுரையை நன்கு தேறிய அறிஞனாகையால், தனக்கு உறுகண் விளைத்துநின்ற வேந்தனை வெகுண்டிலன்.

போரிற் பகைவரை வென்று நிரை மீட்டுத் திரும்பிய விசயன், தமையனுக்கு நெற்றியில் நேர்ந்த

வடுவினைத் திரௌபதியால் அறிந்து மிக்க வெகுளி யுற்று விராடன் தலையினைத் தகர்க்க எழுந்தான். அக்காலை, ஆண்டிருந்த வீமனும் வெகுண்டனன். உடனே தருமன் தம்பியரை யமர்த்தி,

"ஒன்றுதவி செய்யினும்வ் வுதவிமற வாமற்
பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்
நன்றிபல வாகவொரு நவைபுரிவ ரேனுங்
கன்றிடுவ தன்றிமுது கயவர்நினை யாரே"

என்று செய்ந்நன்றியறிதலைப் போற்றி, தம்பி-யரை யடக்கிய செய்கை உலகு பெரிதும் மதித்தற்-குரியது.

பதின்மூன்ரும் போரில் அபிமன்யு சயத்திர-தனுல் கொல்லப்பட, பார்த்தன் மிக்க சோக முற்ற-வனுய், தன் மகனைக் கொன்ற அக் கொடியவனை அந்தி படுவதன் முன்னர்க் கொலை புரியாவிடில், வெந்தழல் மூழ்குவதாக விரதம் பூண்டு, சிறந்ததொரு படையினைப் பெறுதற்குக் கண்ணனேடு கைலைக்குச் சென்ருன். அவன்செய லறிந்த தருமன், வீமன் மதலையாகிய கடோற்கசனை விளித்து, "மைந்த, நீ துரியோதனனை யடைந்து, பார்த்தன், சயத் திரதனை அந்திபடுதற்கு முன்பு அழிப்பதாகக் கூறிய வஞ்சினத்தையும், அதன் பொருட்டு அவன் கண்ணனேடு கயிலையம்பொருப்பனைக் காணுமாறு சென்றதையும் உரைத்திடுதி" என்ருன். மூத்த தந்தை கூறியது கடோற்கசனுக்கு மிக்க விந்தையா யிருந்தது. அதுபற்றி அவன் தருமனை நோக்கி, "எந்தாய், நம் கருத்தை மாற்றலர்க்குத் தெரிவிப்-

பது முறையோ? அஃது அறிவின்பாற் படுமோ?" என்ருன். அதனைக் கேட்டு,

" திறனறி யாம லுரைத்தனை மாருதி
 சிறுவ னெனும்படிநீ
மறநெறி யன்று வயிர்த்தவர் சொல்வது
 வஞ்சனை யோவிரகோ
அறநெறி யேபொருதல்லது வெல்லுத
 லாண்மை கொலோவழகோ
விறனெறியாவது பொய்யிலதென்றனன்
 மெய்ம்மை யுணர்ந்திடுவான்."

சூழ்ச்சியால் சமர் புரிபவர் கயவர் என்றும், அறநெறியில் நின்று அமர் புரிதலே போர்முறையென்றும் தருமன் கடோற்கசனைத் தெருட்டி, அவனுக்கு அறிவு கொளுத்திய பான்மை மிக வியந்து போற்றுதற் குரியது.

**வீமன்**

வீமன் விழுமிய ஒழுக்கம் உடையவன். நற்குணங்கள் யாவும் அவனைச் சார்ந் துய்யத் தம்முட் பிணங்கின. அவன், தேகத்தில் எத்துணை வன்மையுடையனே, அத்துணை வன்மை நற்குணங்களிலும் உடையன். தாயினிடத்தும் தமையனிடத்தும் அவன் செலுத்திய அன்பின் பெருக்கம் என்னே! வீமனைப் போல் வன்மை, வீரம், ஒழுக்கம் முதலியன ஒருங்கே வாய்க்கப் பெற்ற வீரர் மிகச் சிலரே.

ஒருகால், வீமன் கண்ணனுக்குத் தன் மனப் பாங்கைத் தெரிவிக்க நேர்ந்த காலத்து, அவன்

வெளிப்படுத்திய மனக் கிடக்கை, கீழ்வரும் வில்லியின் சொற்களால் நன்கு விளங்குகின்றது.

" பிறர்மனை யவரைப் பெற்றதா யெனவும்
பிறர்பொருள் எட்டியே யெனவும்
பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும்
பிறர் துய ரென்றுய ரெனவும்
இறுதியே வரினும் என்மனக் கிடக்கை
எம்பிரா னிவையென வுரைத்தான்
மறலியு மடியு மாறுமல் லியற்கை
வலிமைகூர் வாயுவின் மைந்தன்."

பிறர்மனையைத் தாயெனக் கருதும் பேராண்மையும், பிறர்பொருள் விரும்பாப் பெருந் தன்மையும், பிறர்பழி கூறாப் பெருந் தகைமையும் வீமனை ஒழுக்கத்தில் மிக உயர்த்தின. ஒழுக்கத்தை உயிரினுஞ் சீரிய பொருளாய் ஓம்பியவருள் வீமனும் ஒருவனென்றே விளம்புதல் வேண்டும்.

**கன்னன்**

எத்தலங்களிலும் ஈகையால் எதிரிலாக் கன்னனுடைய நன்றியறிதலையும் நன்கொடையையும் ஆராயின், அது மனத்திற்கு மிக்க மகிழ்ச்சியைத் தரும். இவ் வீரனிடத்திலுள்ள பல அரிய குணங்களுள் மிகச் சிறந்து விளங்குவன நன்றியறிதலும் பெருங்கொடையுமே யாகும்.

பதினேழாம் நாட் போரில் கன்னன், கௌரவர் சேனைக்குத் தலைவனு யமைந்த போது, துரியோதனனுக்குத் தனது நன்றியறிதலைத் தெரிவிக்க வேண்டி, " அசுணக் கொடியோய், ஒருரும் ஒரு

குலமும் இல்லா என்னை உங்கள் குலத்துள்ளோரில் ஒருவனுக்கி, தேரூர்ந்தான் மனையகத்தே னென்றும் பாராது செம்பொன் மணி முடி சூட்டித் திகழச் செய்தாய். செருவில் என்னுருயிரை உனக்கே யன்றி வேறெவர்க்கே வழங்குவன்?'' எனக் கூறிய சொற்கள் அவன்றன் நன்றியறிதலை நன்கு விளக்கும்.

குந்தி, தன்னைத் தாயென்று கன்னனுக்கு அறிவித்த பின்னர், அவனை நோக்கி, "மதலாய், உன் தம்பியர் ஐவரும் நின்னேவல் புரிய, நீ தனிச் செங்கோல் ஓச்சிக் குருகுலாதிபர்க்குங் குரிசிலாய் வாழ்வாய்'' எனக் குறித்தபோது, கன்னன், அவளை நோக்கி, "என்னைப் பெற்ற நீர் என்மீது அன்பிலாமையினுலோ, அன்றிப் பெரும் பழி நாணியோ, என்னைக் கைவிட்டீர். அற்றைநாள் தொடங்கி இற்றைநாள்வரை துரியோதனன் என்னை ஆருயிர்த்துணைவனெனக் கருதி, அங்கதேசத்துக்கு அரசனுக்கி, என்னேடு உண்டு, அவன் தம்பியரும் சுற்றமும் என்னடி வணங்க, எனக்குத் தோற்றமும் ஏற்றமும் அளித்தான். அத்தகைய பேருதவி செய்த அரசற்காகச் செருமுனைச் சென்று செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே எனக்குப் புகழும் தருமமுமாகும்'' என்ருன்.

குந்தி தன்னை ஈன்றவளென்றும் பாண்டவர் ஐவரும் தன்னேடு பிறந்தவரென்றும் கன்னன் அறிந்தும், அவரைச் சேர்ந்து அவர்க் குதவி புரிய இசையாது, துரியோதனன்பால் செய்ந்நன்றி

பாராட்டி அறத்தில்நின் ரொழுகிய அவன்நிலை அறிஞரால் பெரிதும் பாராட்டற்பாலதாகும்.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"

என்ற குறட்பாவின் கருத்துக் கன்னனுடைய மனத்தே வேரூன்றிக் கிடந்தமை அவன்றன் ஒழுக்கத்தால் நன்கு விளங்குவதாகும்.

பதினேழாம் நாட் போரில் கன்னன் அருச்சுனன் விடுத்த பாணங்களால் கொத்தலர் அலங்கலும், மகுடமும், கவசகுண்டலங்களும் உருக் குலைய, ஆவி சோர்ந்து தேர்மிசைச் சாய்ந்து கிடந்த காலை, மூத்தருக்கெல்லாம் மூலமாய், வேத முதற்கொழுந்தாய் விளங்கும் முகுந்தன், சித்திரச் சிலைக் கை விசயனை நோக்கி, "செரு நீ யொழிக" என்று தேர்மிசை நிறுத்தி, மெய்த்தவக் கோலவேதியனாகி, வெயிலவன் புதல்வனை யணுகி, "நீ தரணியில் தளர்ந்தவர் தமக்கு வேண்டிய தருதி எனச் சொல்லக் கேட்டேன்; யானோ மேருவினிடைத் தவம் பூண்டேன்; மிக்க வறுமையால் பெருந்துயருழந்தேன்; நினக்கியைந்த தொன்றினை இக்கணத் தளிப்பாய்" என்று குறை கூறி யிரந்தான். அந்தணன் உரைத்தவை விசய வெங் கணையால் மெய் தளர்ந்து தேர்மிசை விழுந்த கன்னனுடைய இரு செவிகளுக்கும் அமுதாயின. பின்னர், அவன் நன்றெனநகைத்து, "தரத்தகு பொருள் நீ நவில்" என, நான்மறை யந்தணன், "நின் புண்ணிய மனைத்தும் உதவுக" என் றிரந்தவுடனே, கொடையினுன் நீண்டகைக் குரிசில் "எனது

ஆவியோ நிலையிற் கலங்கியது ; ஆக்கை யகத்ததோ புறத்ததோ அறியேன் ; ஓவிலாது யான் செய்த புண்ணிய மனைத்தையும் நினக்கே உதவினேன்" என்றான். அங்ஙனம் அவன் கூறியதைக் கேட்ட கார்முகில்வண்ணன், கன்னனை நோக்கி, "நின் புண்ணிய மனைத்தையுங் கைப்புனலுடன் தருக" என, ஈகையில் தனக்கோ ரிணை யிலா அவ் வீரன் தன் மார்பில் பாய்ந்து கிடந்த ஓர் அம்பினை வெடுக்கெனப் பறித்து, அதன் வழிக் கொப்புளித்த குருதியால், தான் பண்ணிய புண்ணிய மனைத்தையும் அளித்தான்.

கார் நிகர் வண் கைக் கன்னன், தனக் களித்த பெருங்கொடையால் உளம் மிக மகிழ்ந்த அந்தணன், அவனைப் பார்த்து, "நீ வேண்டும் வரங்களை நவில்வாய்; நிற்கு யான் தருவன்" என்றான். சூரியன் மதலை,

"அல்லல்வெவ் வினையால் இன்னமுற் பவமுண்
டாயினும் ஏழெழு பிறப்பும்
இல்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா
விதயநீ யளித்தருள்" என்றான்.

மாந்தர் இறக்குந் தறுவாயில் உண்மையையே உரைப்பர் என்பது சரதம். அறஞ் செறி தானம் நாளும் அளித்துப் பழகிய கன்னனுடைய மனக்கிடக்கையை அறிதற்குப் பாரதத்தில் இஃதோர் நேரிய இடமாகும். யாவராலும் போற்றி

விரும்பப்படும் அவ்வுயரிய வீட்டையும் மரணகாலத்து அவன்மனம் விழைந்திலது. கொடையில் சார்ந்திருந்த அவனது மனப் பான்மையின் விழுப்பம் என்னே! கன்னனை வாழ்க்கையில் உயர்த்தியவை அவன்றன் அருங்கொடையும் செய்ந்நன்றி யறிதலாகிய செம்மையுமேயாகும்.

## அரிச்சந்திரன்

ஒருவர்க்குக் கல்வி கேள்விகளால் வரும் விளக்கம் விளக்கமன்று; பொய்யாமையால் வரும் விளக்கமே சிறந்த விளக்கமாகும். இவ் விளக்கமே மாந்தரின் மனவிருளைப் போக்குவது. பொய்யாமையாகிய வறத்தைச் செய்வார் பிறவறங்களை வருந்திச் செய்யவேண்டுவ தின்று. அவர் அவ் வறங்கள் யாவற்றையும் செய்யாமலே செய்தவராவர். பொய்யாமை உலகிலுள்ள எல்லாவறங்களையும் தழுவி நிற்பதாம். இவ் வுயரிய அறத்தை ஆற்றுதல் எளிதன்று. இதனைத் தவத்திறம் பூண்டாரே இனிதின் முடித்தற் குரியர். இதனாலன்றோ திருவள்ளுவரும் இதனை இல்லறவியலுள் சேர்த்துக் கூறாது துறவறவியலுள் சேர்த்துக் கூறினார். அவர் அங்ஙனம் அமைத்த பான்மையால் இவ் வறத்தின் அருமை நன்கு விளங்குகின்றது.

அரிச்சந்திரன் உலகாளும் வேந்தனா யிருந்தும் பொய்யாமையை மேற்கொண்ட ஆற்றல் என்னே! அவன்மனவுறுதி என்னே! அவன் நாட்டினை இழந்து முதுகாட்டில் புலைத்தொழிலை மேற்கொண்டுழன்றது வாய்மையைக் காப்பதற் கன்றோ?

அவன்மனைவியும் தனயனும் அந்தணனுக்கு அடிமைப்பட்டது அப் பொய்யாமையை நிலைநாட்டிவன்றோ ?

வாய்மையில் வல்ல அரிச்சந்திரன் முதுகாட்டில் வருந்தி யுழன்ற காலத்தில் கோசிகன், அவன்பால் அணுகி, "நான் முன்னம் தந்த நாட்டினைத் தந்ததில்லை யென் றொரு சொல் உரைப்பின், நீ இழந்த நாட்டினைப் பெற்று இன்புற்றிருக்கலாம். எதற்காக நீ இவ்வண்ணம் வருந்துதல் வேண்டும்" என்று கூறிய போது, அரிச்சந்திரன்,

"பதியி ழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதியி ழந்தனம் இனிநமக் குளதென நினைக்குங்
கதியி ழக்கினுங் கட்டுரை யிழக்கிலேம் * *"

என்று மிக்க அமைதியோடு கூறிய சொற்கள் அவனது வாய்மையின் திட்பத்தையன்றோ விளக்குகின்றன !

ஒழுக்கத்தி னுயர்ந்த பெரியார்களின் புகழ் என்று மழியாது நிலைபெற்று ஓங்குமென்பது திண்ணம். இத்தகைய பெரியார்களைப் பின்பற்றி நடத்தலே கற்றோர்கடனாகும்.

## இயற்கை

அன்பு, அருள் முதலிய சீரிய குணங்களிற் பழகி, நல்லொழுக்கம் மேற்கொண்ட ஒருவருள்ளம் பல்லுயிரும் பல வுலகும் படைத்தளித்துத் துடைக்குமப் பரம்பொருளை அறிதற்கு அவாவும். இஃதே அவ-

வுயரிய வுள்ளத்தின் இயற்கையாம். கட்புலப்படாத கடவுளை மக்கள் எங்ஙனங் காணுதல் கூடும்?

கடவுள் இயற்கையின் வடிவாய் இலங்குகின்றார். இயற்கையாங் காட்சிப்பொருளே இறைவனது உண்மையை உணர்த்தும். இறைவன் திருமேனி இயற்கையாம். அவன்றன் திருமேனியின் அழகே நாம் கண்டின்புறும் இயற்கையின் அழகாம். நாம் அவன் அழகு இயற்கையில் எங்கும் பொலியக் காண்கின்றோம். இத்தகைய இயற்கையின் வழிபாடே இறைவழிபாடாம். இயற்கையின் திறத்தை யோராதார் அதற்கு இன்னலைப் புரிந்து, இயற்கையின்பத்தை யிழப்பவ ராவார். அறிஞர், இயற்கையில் இறைவன் உளனென் றறிந்து அதற்கு ஒரு சிறிதும் இன்ன லிழைக்கார்.

இறைவன்பால் கனிந்த அன்புடைய தாயுமானவர்,

“பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணேன்”

என்று இறைவன் திருமேனிக்குத் தீங்கினைப் புரிய அஞ்சியவராய்ச் செய்தொழிலற்று அவ்விறைவனைப்போற்றிய பான்மை அனைவரும் பெரிதும் பாராட்டற்குரியது.

இயற்கையில் திளைத்த உள்ளம் இன்பநிலை எய்தப் பெறும். அவ்வியற்கையின்பம் இன்னதென்-

றறிதற்குமுன்னர், அவ்வியற்கையின் இலக்கணத்தைச் சிறிது இசைப்பாம்.

இயற்கையென்பது செயற்கைக்கு மறுதலைப்பட்டது. கையாற் செய்யப்படுவது செயற்கை. கையாற் செய்யப்படாததே இயற்கையாகும். காடும் மலையும் யாறுங் கடலும் எவரால் ஆக்கப்பட்டன? அழகிய நீலப்படாத்தில் நித்திலந் தூவினுலொத்து விளங்கும் வானத்தின் செவ்வியை இழைத்தவர் யாரே? வெள்ளிக்குட மொன்று அமுதத்தைச் சொரிகின்ற தொத்த திங்களின் நிலவை இயற்றியவர் யாரே? நீரிற்குத் தண்மையையும் நெருப்பிற்கு வெம்மையையும் ஊட்டினவர் யார்? இவை யாவும் இயல்பாக அரும்பியவை. கை புனைந்தியற்ருக் கவின் பெறு வனப்பொடு திகழுமிவை இறைவனுடைய திருமேனி என்ருேம். இறைவன் இன்பொடு கூடிய அழகின் வடிவம் என்பதை எவரே மறுக்க வல்லார்? இயற்கை அழகின்வடிவமன்ருே? அஃது இன்பமூட்டும் இயல்பிற்றன்ருே? அதனை ஏன் நாம் இறைவன் என் றுணர்ந்து வழிபடுதல்கூடாது? இயற்கையை நம் முன்ஞேர் இங்ஙனமே உணர்ந்து இறைஞ்சினர். இயற்கையில் இறைவனைக் கண்ட நம் வாசகப்பெருந்தகையார்,

“ நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனுய மைந்தனே டெண்வகையாய்ப் புணர்ந்துநின்ருன்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னெருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்க மாடாமோ ”

என் றருளிய செய்யுளில் இவ் வுண்மை வெள்ளிடைமலை யென விளங்கிக் கிடக்கின்றது.

இயற்கை பல பல வடிவங்களாகத் தன்னைக் காட்டி உலகிற்கு மகிழ்ச்சியை ஊட்டுகின்றது. மாந்தர் இயற்கைப்பொருட்கண் கருத்தை யொற்றி, அதன் அழகை உணர்ந்தும், உணர்ந்த பின்னர் ஒற்றியும் பயில்வராயின், அவர் உள்ளத்து உருவற்ற இறைவன் திருவொடு மிளிர்வன். இறைவன் உறையப் பெற்ற உள்ளத்து ஊறும் இன்பம் இத்தகைத் தென்று இயம்பவும் படுமோ?

நம் பண்டைத் தமிழ்க்கவிகள் இயற்கையில் திளைத்த வாழ்க்கையராய் அவ் வியற்கையை வழிபட்டு வந்தனர். அவர், தம் நாடகம், காவியம் முதலிய சீரிய நூல்களில் இயற்கையழகை எத்துணைப் போற்றிவந்தனர் என்பது அன்னார்நூல்களைப் பயில்வோர் நன்குணர்வர். அவர் இயற்கைக்கு முதன்மையளித்தவராகையால், தாம் யாத்த காவியங்களில் யாற்றுப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம் என்று தொடங்கி, அப் படலங்களுள் இயற்கையின் அழகையே மேன்மை யுறப் பாடிச் சென்றனர். செம் பொன்னை யுருக்கி வார்த்தாலனைய செக்கரின் செவ்வியும், கற்களை அரித்தோடும் யாற்றின் அழகும், பூத்துக் காய்த்துப் பெருங்காட்சி நல்கும் பொழிலின் பொற்பும், பெண்களின் சாயலை யொத்த மயில்ஆடு மாண்பும், மாதர்நோக்குடன் பயிலும் மானின் குதிப்பும், அன்னார் குரலொடு பொரும் குயிலின் இசையும் அக் கவிகளின் மனத்தைக் கொள்ளை கொண்டன. இயற்கையில் ஈடுபட்ட நம் பண்டைத் தமிழ்க் கவிகள் இயற்-

கையைப் பாட்டோவியமாக இயற்றி நல்கியது நம் பெரும் பாக்கியமே.

" பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்கு
இருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழிற்
குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்யாழ் செய்ய
வெயினுழைபு அறியாக் குயினுழை பொதும்பர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்
மாசறத் தெளிந்த மணிநீ ரிலஞ்சிப்
பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
றொருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
அரச வன்ன மாங்கினி திருப்பக்
கரைநின் றாலும் ஒருமயி றனக்குக்
கம்புட் சேவல் கனைகுரல் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்
இயங்குதேர் வீதி யெழுதுகள் சேர்ந்து
வயங்கொளி மயங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கரைநின் றோங்கிய
கோடுடைத் தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ண மாடிய திதுகாண்
மாதர் நின்கண் போதெனச் சேர்ந்து
தாதுண் வண்டின மீதுகடி செங்கையின்
அஞ்சிறை விரிய அலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
கெறிந்தது நீங்கு மணிச்சிரல் காண் "

என்ற மதுரைக் கூல வாணிகன் சாத்தனாரின் மலர்வனவருணனை பயில்வோர்மனத்திற்கு மகிழ்ச்சியை விளக்கும். இதனைச் சாத்தனார் தமது மனச் சீரையி லமைத்து இன்புற்று, நம்மையும் அவர்வழி

ஊக்குவராயின், அவர், இயற்கையன்னையைப் போற்றிய பாங்கு என்னே! அவர் இயற்கையை நன்கு ஆராய்ந்து, அதில் தோய்ந்து இன்புற்ற பான்மை பெரிதும் போற்றற்குரியது.

இறைவன் இயற்கையின் வாயிலாகத் தன-தழகை நாடோறும் பொழியாவிடின், உலகில் இன்பம் ஏது? அப் பெருந்தகை, காலை தோறும் நீலக் கடலில் நெருப்புப்பிழம்புபோன்று ஞாயி-ருகத் தோன்றி ஒளியினை உலகிற்கு உதவாவிடின், உலகம் எப்பாடு படும்? அவன் திங்களாகத் தோன்றி நிலவினைப் பொழிந்து இருளினைக் கடியாவிடின், மாந்தர் எங்ஙனம் இன்புற்ற வாழ்க்கைய ராவர்?

இயற்கையை இறைவனெனப் போற்றி, அதனை வழிபடுவார்தம் உள்ளம், அழுக்காறு, அவா முதலிய தீக்குணங்கள் உலவும் நில மாகாது; அஃது அன்பு, இரக்கம் முதலிய தூய குணங்கள் வாழும் நன்னிலமாகும்: அழுக்காறு, அவா முதலிய பேய்க் குணங்கள் மாந்தரை நோய்வாய்ப் படுத்தி விரைவில் கொல்லும். அன்பு, இரக்கம் முதலிய தெய்வ நீர்-மைகள் மாந்தரது வாழ்வை வளர்ப்பனவாகும்.

இயற்கையழகைக் கண்டு, பொறிகளை அதன்-வழிச் செலுத்தி இன்பத்தை நுகர்பவனே உண்மை-யில் அறிஞனெனப் படுவன். அவ்வறிஞனுடைய பொறிகளும் புந்தியும் இயற்கையில் தோய்ந்து ஒன்றுபடலால், அவன் இயற்கையன்னையின் மக னாகின்றான். அம்மகனே உலகினை உய்யுமாறு செய்பவன்.

தற்கால நாகரிகப் பித்தேறி மதி மயங்கும் மாந்தர் இயற்கையன்னேக்கு இன்னல் இழைக்கின்றனர். அவரால் மலேகளின் அழகும் வனங்களின் வனப்பும் அழிதலுறுகின்றன. அவ் வியற்கைப் பொருள்கள் இருந்த இடங்கள்தோறும் பஞ்சாலேகளும் தொழிற் சாலேகளும் நிறுவப்பட்டுள. இருப்புப் பாதைகள் அநேக எழிலுடைப் பொழில்களே அழித்துவிட்டன. இவைகளே தற்காலநாகரிகர் கண்ட முன்னேற்றம். இயற்கையே மாந்தரை வாழ்க்கையில் உயர்த்துவதென்றும், இயற்கையின் செவ்வி யூறிய உள்ளத்தவரே உண்மையில் நாகரிக முற்றவரென்றும் அவர் அறிந்திலர் போலும். உயர்ந்த நாகரிகத்தைப் பெற விழைபவர் இயற்கையாங் காட்சிப்பொருள்களில் தங் கருத்தினேச் செலுத்திப் பழகுதல்வேண்டும். அன்னர் இயற்கைநினேவினின்றும் நீங்காதவாறு தம்மைக் காக்கவல்ல முயற்சிகளில் தலேப்படுதல் மிக்க சிறப்புடைத்தாகும். இங்ஙனம் இயற்கையழகில் முயலும் நல்லறிவாளரே நயத்தகு நாகரிகம் வாய்க்கப்பெற்று, அன்போடமர்ந்த வாழ்க்கையராய் இன்ப நிலே எய்துவர்.

**நூல் நிலேயம்**

இயற்கையழகை உணர்ந்து இன்புறுதற்குமிக்க சாதனமாயுள்ளன நம் பண்டைய நூல்களே. பண்டைய நூல்களேப் பெரிதும் பாராட்டுதல் நாம் நம் முன்னேரைப் போற்றியவாருகும். நம் நாடு முன்னேற்றமடைய வேண்டுமானல், நாம் நம் முன்னேர்-

நூல்களைப் பொன்னேபோல் போற்றுதல் வேண்டும். நம் முன்னோர்நாட்டின் திறம், அந்நாட்டின் பழக்க வழக்கங்கள் முதலியவற்றை நாம் நன்கு அறிதல் வேண்டும்.

நமக்குப் பேரறிவு கொளுத்தும் நம் பண்டைய நூல்களைச் சேமித்து அவைகளுக்குச் சிறந்ததோர் நூல்நிலையம் அமைத்தல் நம் கடமையாகும். ஒரு வீரன் தன்னுடைய படைக்கலச் சாலையில் தன் ஆயுதங்களைத் தீட்டித் துடைத்து உரிய விடங்களில் அமைத்து, வேண்டுழி அவைகளை ஞெரேலென எடுத்தாளுதல் போன்று, கற்றோரும் நூல்களைத் தமக்கென விருக்கும் நூல்நிலையத்துள் ஒழுங்குற அமைப்பராயின், அவைகளை வேண்டிய போது விரைவிலெடுத்து விடயங்களை யுணர்ந்து இன்புறுதல் கூடும்.

செல்வத்தைப் பெரிதும் ஈட்டுதலிலேயே கண்ணுங் கருத்துமா யிருப்பவர்க்கு அறிவுநூல்களை ஆராய ஊக்கமும் செவ்வியும் நேரா என்பது ஒருதலை. செல்வத்தால் கண் குருடுபட்டார்க்கு நூல்களின் அருமையும் நூல்நிலையத்தின் பெருமையும் ஒரு பொருளாகத் தோன்ரு. சிறந்த நூல்களுக்காக மிக்க பணத்தைச் செலவிடுவாரை அவர் நூற்பித்தர் என்பர். மனிதர் குதிரைப்பந்தயத்தில் செலவிடும் பொருளுக்கோ கணக்கில்லை; குடிக்குச் செலவிடும் பணம் சிறிதன்று. மாந்தர் இத்தகைய தீய வழிகளில் செலவிடும் பொருளை நூல்களின் நிமித்தம் செலவிடின், இஃது அவர்க்கு எத்துணை

உறுதி பயப்பதாகும்! உடலுக்கு உணவு எத்துணை இன்றியமையாததோ அத்துணை, மாந்தர் அறிவிற்கு நூல்களும் இன்றியமையாதனவாம். சிறந்தநூல்கள் மாந்தர் அறிவிற்கு உயர்ந்த உணவை ஊட்ட வல்லன. இத்தகைய அறிவுநூல்கள் நிரம்பிய நூல்நிலையமே கற்றோர்மனையை அழகுற அலங்கரிப்பதாகும். ஒருவர் இல்லம் எத்துணைச் சிறந்து விளங்கினும் அதனுள் சிறந்த நூல்நிலையம் ஒன்றில்லை யாயின், அது மங்கலநாண் இழந்தவளைப் போன்று மாட்சியிற் குன்றும். ஆகையால் கற்றோர், நூல்நிலையத்தைப் பெரிதும் போற்றுதலைத் தங் கடனாகக் கொள்வாராக.

**உண்மையரசரும் அவர்தம் நிதியும்**

அறிவுநூல்களால் மாந்தர் முடிவாக அடைவது அருளேயாகும். இவ்வருளினைப் பெற்ற வித்தகரே உலகில் உண்மையில் உயர்ந்தவரென மதிக்கப் படுவர். அவர்நிலையே தெய்வநிலையாம். அவர் பெற்றதே வாழ்க்கையில் விழுமிய பேறும். இஃதே உண்மையில் வாழ்க்கையில் முன்னேற்றமாகும். ஏனையவற்றை முன்னேற்றமென முழங்குவோர் உண்மையில் வாழ்க்கையின் விழுப் பயன் இன்னதென்று உணராதாரே. அவர் கண்ட முன்னேற்றம் உலகு மதிக்கப் பட்டங்களைப் பெறுதலும், வாகனச் செல்வராய்ப் பிறர் மதிக்க வாழ்தலுமேயாம். அந்தோ! நன்னூற் பயிற்சியால் இன்பத்தில் தோய்ந்தவரின் இதயத்துள் என்றும் அன்பலர்ந்து அருள்தேன் பிலிற்றுவதை அவர் அறிந்திலர்போலும். அவர்நிலை பெரிதும் இரங்கற்பாலதே.

அறிவுநூல்களால் அருளினைப் பெற்றவரே இவ்வையகத்து உண்மையரசராவர். அவரே அரச-நிலையை உலகில் என்றும் வகித்தற் குரியவர். ஏனைய முடிபுனை மன்னர் உண்மையில் மன்னவ ராகார். அவர்கள் நாடகப் பாத்திரங்களே யொழிய வேறல்லர். நாடக மேடையில் முடி யுடைய போலிமன்னரை யாரே மன்னரென மதிப்பர்? அரச சின்னந் தாங்கி அரசனைப்போன்று நடிப்ப-தனல் அவர் மன்னவர்நிலையினை எய்தி விடு-வரோ? இவ்வுலகத்தை யாளும் மன்னவர் உண்மை-யரசராகிய அறிவில் திகழ்ந்த அருளுடையோரை நோக்க, நாடகமன்னவரே யாவர். நாடகமன்னர் அணியும் அணிகலன் யாவும் உண்மையான அணி-கல னமோ? அவை யாவும் பகட்டிற்கு அணியப்பட்ட போலிப்பொருளேயாம். நாடக மன்னரின் ஆபர-ணங்களை உண்மையானவை யென்று நம்புவாரும் உளரோ? போலிச் சின்னங்களை உண்மை யென்-றெண்ணுவார் அறியாமை யென்னும் நோய்வாய்ப்-பட்டவரே.

முடி புனை மன்னவ ரனைவரும் மன்னரென்ற பெயரினைத் தாங்கினரேயன்றி வேறோர் பயனைக் கண்டாரில்லை. இப் போலிமன்னர் குடிகளை வருத்துங் கொடுங்கோலாளர்; தமது ஆளுகையையே அரிய நோக்கமெனக் கொண்டவர்; சமயம் நேர்ந்-துழிக் குடிகளைத் தமது பண்டமாகக் கொண்டு விலையும் பகர்வர்; தமதாணையில் அடங்கிய குடிகளை நல்வழிப் படுத்தாது தம்மடிப்படுத்தி வருத்தும்

வன்கணர்; குடிகளின் குருதியை உறிஞ்சுங் கொசுக்களாவார். இவர் வீற்றிருக்கும் நீதிமன்றம் அட்டையும் உண்ணியும் பொருந்து மிடமாம்.

மக்களறிவினைப் பெருக்கி, அருளினைப் பொழியும் நம் அருங் கவியரசர் செய் தொழில், முடி புனை மன்னவர்தொழிற்கு முற்றிலும் மாறே. இக் கவியரசர் நம்மை யொருநாளும் ஆளுதலே இல்லை. நம்மை அடிமைப்படுத்துதலில் இவர்க்கு ஒருபோதும் விருப்பமே யின்று. இவர் நம்மை அன்பில் ஊக்கி நல்வழிப்படுத்த முயலுவர்; வாழ்க்கையின் விழுப்பத்தை நாம் பெறுமாறு நமக்குப் பெரிதும் துணை புரிவர்; நாம் வாழ்க்கையில் முன்னேற்றமடையுமாறு நமக்கு நல்லறிவு கொளுத்துவர்; நமது இதயமாம் நன்னிலத்து அறிவென்னும் வித்திட்டு, அன்பு நீர் பாய்ச்சி, அதன் பயனாய அருட்கனியை நாம் துய்க்குமாறு நமக்கு அருள் புரிந்து நிற்பர். இவரன்றோ உலகினை உய்விக்கும் உண்மையரசராவார்? நாடகமன்னரென்று நாம் நவின்ற அப் போலிமன்னர், பல நாடுகளையும் தம்வயப்படுத்தித் தமக்கே உரிமையாக்கிக் கொள்வர். அவர் குடிகளின் அன்பைப் பெருக்காதபோது, அவர் படைத்த செல்வத்தின் பயன்தான் யாது? அவர் வருந்திச் சேமித்த பொன்னும் மணியும் நாளடைவில் வீணே அழிதலுறும்.

நம் கவியரசர் தமது அறிவின் ஆற்றலால் ஆக்கிய அறிவுநூற்பேழைகள் பல. அவை விலையுயர்ந்த மணிகளைத் தம்மகத்தே கொண்டு மிளிர்கின்றன. நமக்கென அவ ராக்கிய அச் சீரிய செல்-

வத்திற்குக் கள்வர்பய மின்மையான், காவலொன்றும் வேண்டுவதின்று. அவ் வரு நிதியைக் கவருவான் கள்வர் பலர் முனையினும், அவரான் கேடொன்றுமின்று. அக் கவியரசர் தொகை பெருக, நாடு உயர்ந்தவாறாகும். அவர் உறைதரும் நாடே சாகரஞ்சூழ் நன்னாட்டின் முன்னாட்டும் நாடென நல்லோரனைவரும் அதனைப் போற்றிப் புகழ்வர்.

வாழ்க்கையில் விழுப்பம் அடைய விழைபவர், அழுக்காறு, அவா முதலிய பேய்களுக் கிரையாகாமல் நம் பண்டைக் கவியரசர் ஆக்கிய நூல்களாம் பண்டாரத்தைத் தமது சிறந்த அறிவுத்திறவுகோற்கொடு திறந்திடக் காண்பன, காழேறிய முத்தும் விலை யுயர்ந்த மணிகளுமாம். இவ்வரிய மணிகளால் குயிற்றிய தமனியப்பாதையே பேரின்ப வீட்டிடை என்றும் அழிவின்றி இன்புற்று நிலைபெறுமாறு அவரை உய்ப்பதாகும்.

---

# II. மங்கையர் மாண்பு

இந் நூலின் முதற்பகுதியில் நன்னூல்களைப் பயிலும் பான்மை இஃதென்றும், அதனாற் போதரும் பயன் இன்னதென்றும் விளக்கினோம். இனி, கல்வியின் பயிற்சியையும் இலக்கிய வுணர்ச்சியையும் எங்கும் பரப்புதலில் தற்காலத்து நமக்குள்ள அனுகூலங்கள் பலவேனும், கல்வி, மாந்தரை எந்நிலைக்கு உய்க்கும் என்பதையும் இலக்கியங்கள் உண்மையில் கற்பிப்பது இன்னதென்பதையும் நாம் தெள்ளிதின் உணர்ந்தாலன்றி, அவ் வனுகூலங்களைச் சரிவரப் பயன்படுத்திக்கொள்ள முடியாதென்பதை நன்கு உணர்தல் வேண்டும்.

## உண்மை அரசியல்

உண்மை நூற் பயிற்சியும், அறம் பிறழா ஒழுக்கமும் ஆகிய இவ்விரண்டும், கயவர் கல்லாதவர் ஆகிய இருதிறத்தார்மீதும் செலுத்துதற்கு அமைந்தவோர் வல்லமையை நமக்கு நல்குகின்றன என்பதை நாம் உய்த்துணர்தல் வேண்டும். இவ் வல்லமையே உண்மையரசியலாகும். ஏனைய அரசியல்போலியே யொழிய வேறன்று. செங்கோலும், வெண் குடையும், நீள் கொடியும், மணி முடியும் வெறும் பகட்டே யாகும். இப் போலித்தோற்றங்களைக் கண்டு, இவையே உண்மையென்று உன்னுவார், கானல்நீரை உண்மை யென்பாரை யொப்பர். கொடுமை புரியும் அதிகாரமும், அடக்கியாளும் உரிமையும் அரசாகுமோ? உண்மைவழி நிற்கும்

வேந்தர்க்கு அவ் வதிகாரமும் உரிமையும் வேண்டற்பாலனவல்ல. அவ் வேந்தர், நீதியின் முறையாலும் அன்பின் நெறியாலும் ஆள்பவராவர். அவர்க்கு மாருய், நீதியையும் அன்பையும் அறவே துறந்து உலகினை யலைத்துக் கொடுங்கோல் செலுத்துவோரை அரசரென்பது அறியாமை யாகும். உண்மையாய் நோக்கின், முடியொன்று தலைமேல் சூடினுல் என்? சூடாவிடில் என்? யாவரும் எய்த வல்லதும் எந்நாளும் நிலைபெறுவதுமாகிய அரசியலை மேற்கொள்பவர் யாவர்? அறக்கொள்கையினின்றும் விள்ளாவுரனும், உண்மையைத் துருவியாராயும் மனநிலையும் பெற்றுப் பிறர்க்கு நல்வழி காட்டி, அவரை வாழ்க்கையில் உயர்த்துபவரே என்றும் பொன்ருப் புகழுடைய மன்னவராவார். மன்னவர் என்னும் பதத்திற்கு நிலைத்திருப்பவர் என்பது பொருள். ஆகையால், புகழினுல் உலகில் என்றும் நிலைத்திருப்பவரே மன்னவரென்று வழங்குதற்கு உரியராவார். அவர்க்கு என்றும் நடுக்கம் என்பதே யில்லை. அவர் நடுநிலையினின்று சிறிதேனுங் கோடுவாரல்லர்; அறத்தையே தாம் அமரும் அரியணை யாக்கிப் பிறரால் மாற்றவும் அழிக்கவும் ஆகாத நிலையில் அரசியலை மேற்கொள்வர்.

நாம் அல்லலுற்றுப் பல்லாற்ருனும் அலையாது அமைதியைப் பெற்று, உலகினை நல்லாற்றுப் படுத்தற்குரிய தனியரசாட்சியை நமக்கு நல்குவது கல்விப் பயிற்சியும் இலக்கியவுணர்ச்சியுமே யாம். இத்தகைய அரசாட்சியில் மாதர்க்குரியது எத்துணையது? எவ்வகைப்பட்டது? அவரரசாட்சி எத்-

துணைத்தூரம் செல்லத் தக்கது என்பனவைகளை நாம் நன்கு உணர்தல் வேண்டும்.

மாண்பொடு கூடிய மங்கையர்க்குரிய அரசாட்சியால் உலகில் அழகும் அன்புந் திகழ, அன்னவர் பரிபுரமணிந்த பதமலர் பொருந்தச் செல்லுமிடமெல்லாம் மலர்வனமாகி மணங்கமழாநிற்கும். அவ ருறையுமிடம் சிறு குடிலெனினும், பெரு மாளிகையாம். அவர் அருள்நோக்கால் நாடு உய்யும். இத்தகைய சீரிய மங்கையரின் மாண்புடைய செயலும் அவர் அதனை யாற்றும் வகையும் இன்ன என்று இயம்புவாம்.

மங்கையர் அரசாட்சி இத்தகையதென்று அறிதற்குமுன்னர், அவர்மாட்டு அமைந்து கிடக்கும் ஆற்றல் இன்ன தன்மையதென்பதை நாம் நன்கு தேர்தல் வேண்டும். பின்னது துணிந்தே முன்னதின் முடிவு காண்டல் வேண்டும். அஃதேபோல், அவர் இல்லத்தமைந்து ஆற்றும் பணி இஃதெனத் தேரு முன்னர், வெளியிடத்துத் தங் கடனாற்றக் கல்வி எவ்விதம் அவர்கட்குத் துணை புரியும் என்பதை எண்ணவும் முடியாது. பெண்களின் இல்லற வாழ்வினைப்பற்றியும் அவர் உலகிற்குப் பயன் படுந்திறத்தைப்பற்றியும் பலர் இக்காலத்தில் இடையீடின்றிப் பேசியும் எழுதியும் வருவதுபோல் இதற்குமுன் என்றும் நிகழ்ந்ததில்லை. ஆண், பெண் ஆகிய இவ் விருவருள், ஒருவருக்கு மற்றொருவர்பாலுள்ள உறவையும் அவர்தம் இயற்கைக்குணங்களையும், இருவருக்கும் வேறாய் அமைந்து கிடக்கும்

மனப்பாங்கையும் எழுதியும் பேசியும் வருவோர், உலகு சம்மதிக்கும் வகையில் இதுவரை அவற்றின் அளவு கண்டாரிலர். பெண்டிர், வாழ்க்கையில் ஆடவரினின்றும் வேறு பட்ட நோக்கத்தையுடையர் என்னுங் கொள்கை தவறும் இயல்புடையதாகும். பெண்டிரை ஆடவரின் சாயையென்றும், அவர், தமக்கென வோர் உரிமையும் இன்றி, என்றும் அடிமைகளாய்த் தங் கணவரின் அடி யுறைந்து நிற்பவர் என்றுஞ் சிலர் பேசுவர். அவர் பேச்சு முன்னதனினும் பெருந் தவறுடையதாம். மனிதன் துன்பத்தால் நிலைகுலைந்து சோர்ந்த காலத்து, அவனுக்கு ஓர் ஊன்றுகோலாய் உதவி புரியும் மங்கையரை அடிமைகளென்றும் அடுப்பூதும் மடையரென்றுங் கொள்ளல் மடமையே யாகும்.

மங்கையரின் அறிவும் அறமும் எங்ஙனம் ஆடவரோடு தொடர்புற்று இன்பநிலையில் இருவரையும் ஊக்குகின்றன என்பதை ஆராய்வாம்.

## பெண்மையும் ஆண்மையும்

எழுவகைத் தோற்றமும் பெண், ஆண் என இரு பிரிவா யுள்ளன. புல் முதலிய தாவரங்கட்கும் உயிர் உண்டென்றும், அவ்வகளும் நம்மைப் போலவே பெண்ணொடு கூடி இன்புற்று வாழுந் திறத்தன வென்றும் நம் பண்டைய நூல்கள் நன்கு பகருகின்றன. அவைகளையே இக் காலத்தில் ஜகதீச சந்திர போஸ் என்னும் அறிஞரும் நுண்ணிதின் ஆராய்ந்து, அவ் வாராய்ச்சியின் பயனாக நுட்பங்களை நாமெல்லோரும் வியக்கும்வண்ணம் கரு-

வித்துணை கொண்டு கட்புலப் படுத்தினர். ஓரறிவுடைய தாவரமே பெண்ணெடு கூடி இன்புறுகின்ற தெனில், ஏனைய உயிர்களைப்பற்றி இயம்புதல் வேண்டா. இதனல் இவ்வுலகம், பெண் ஆண் வடிவாய் இயங்குகின்றது என்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மை.

கடவுளரும் பெண், ஆண் வடிவாய் விளங்குகின்ருர். பெண்கடவுளை நாம் இகழ்வதில்லை. நம் ஆன்ரோர் நூல்களை ஆராயின், பெண், ஆண் ஆகிய இரண்டிற்கும் சமத்துவம் சொல்லப்பட்டுள்ளதைக் காணலாம். இப் பெண், ஆண் கடவுளரை அவரவர் தத்தம் மனப்பான்மைக்குத் தக்கவாறு வழிபட்டு வந்தனர். சிலர் கடவுளரைத் தாயாகவும் தந்தையாகவுங் கொண்டு வழிபடுவர். மணிவாசகப் பெருந் தகையாரும், "அம்மையே, அப்பா, ஒப்பிலா மணியே" என்ருர்.

அரி, அயன், அரன் என்னும் இம் மும்மூர்த்திகளும் தம் மனைவிமாரைப் பெரிதும் மதித்து அவருடன் வாழ்வதை நம் மத நூல்கள் நன்கு புலப்படுத்துகின்றன. சிவன் தன் மனைவியைப் பாகத்திலும், திருமால் பங்கயச் செல்வியைத் தன் ஆகத்திலும், நான்முகன் வெண்டாமரைக்கிழத்தியைத் தன் நாவிலும் வைத்துளர் என்ருல், அவர், பெண்களை எத்துணை உயர்வாகக் கருதினர் என்பதைக் கூறவேண்டுவ தின்று.

பெண்மையில் தண்மை யுண்டு; ஆண்மையில் வெம்மை யுண்டு. கற்ரோர் இவ்விரண்டின் கூட்டமே

இக் காரிய வுலகம் எனக் கழறுவர். இவ் விரண்டும் மலரும் மணமும் போன்று ஒன்றை விட் டொன்று பிரியாது உறையும். தண்மையும் வெம்மையும் எங்ஙனம் ஒருவர் உடல்நலத்திற்கு இன்றி யமையா-தனவோ, அங்ஙனமே பெண்மையும் ஆண்மையும் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாம்.

பெண்ணுக்கு மாதர் என்னும் ஒரு பெயர் உண்டு. மாதர் என்னும் அப் பதத்திற்குத் தொல்காப்பியர், காதல் என்று பொருள் கூறுவர். "மாதர் காதல்" என்பது தொல்காப்பியச் சூத்திரம். காண்பவரால் விரும்பப்படும் பொருள் அழகுடையதா யிருத்தல் வேண்டுமாகையால், மாதர் என்னும் அப்பதத்திற்கே அழகு என வேறொரு பொருளும் பின்னர் வழங்க-லாயது. நம் முன்னோர் பெண்களை அழகுடைப் பொருளெனக் கருதி அவர்க்கு மாதர் எனும் பெய-ரைச் சூட்டினர் போலும்.

கடவுட்டன்மையை நன்குணர்ந்தோர் கடவுளை அழகென்பர். கடவுள் அழகுவடிவமாய் விளங்கு கின்றார். கட்புலப் படா அக் கடவுளை அறிய விரும்பு வோர், யாண்டுயாண்டு அழகுண்டோ, ஆண்டு ஆண்டு கடவுள் உண்டென்று அநுமானப் பிரமாணத்தால் அறிந்துகொள்ளுதல் கூடும். அழகில்லாத இடம் கடவுளில்லாத இடமாகும். பெண்களை அழகுடைப் பொருளெனத் தேர்ந்து அப் பொருள்பா லுள்ள கடவுட் டன்மையை யுணர்தல் வேண்டும். இவ்-வுணர்ச்சியே இறைவழிபாட்டினை எய்துவிக்கும். பெண்களுக்கு உறுகணை விளைத்து அவர்களைத்

தாழ்த்துவோமாயின், நாம் கடவுளுக்கே தீங்கினைப் புரிந்தவராவோம்; அவர்களை மேன்மை யுறச் செய்வோமாயின், இறைவழிபாட்டை எய்தியவராவோம்.

பெண்மை யென்பது, அடக்கம், அன்பு, பொறுமை, தன்னலம்துறத்தல் முதலிய பண்புகளின் கூட்டமாம். இக் கூட்டமே உலக இன்பத் திற்குக் காரணமாகும். அடக்கம் முதலியவற்றின் மறுதலைப்பட்ட குணங்களின் கூட்டத்தால் விளைவது துன்பமே யாகும். இத் தீக்குணங்களால் உயிர்கள் வருந்தி அழிவுறும். அடக்கம் முதலிய நற்குணங்களால் விளைவது இன்பமாயின், பெண்களை இன்பநிலைக்களம் என்பது பொருத்தமுடையதே.

இவ்வழகிய வுலகமே பெண்பா லுள்ளது என்னலாம். பெண்கள் இல்லையேல், உலகு இல்லையாம். இவ் வுலக ஆக்கமும் அழிவும் பெண்பா லமைந்துள்ளன. பொறையுடன் சூலாற்றி, மக்களை வருந்தி யீன்று, அவர்களுக்கு அன்பு, அறம், வீரம் முதலிய குணங்களைப் பாலுடன் குழைத்து ஊட்டி வளர்ப்பவர் பெண்களல்லரோ? தீய மக்களிடத்தும் தாய்மார் தந்நலங் கருதாது செலுத்தும் அன்பின் பெருக்கம் என்னே! அவர் அக் கொச்சைமக்களிடத்து எந்நலங் கருதி அன்பைச் செலுத்துகின்றனர்? இதனை நன்கு தேருங்கால், அவரன்பு ஒன்றையுங் கருதிச் செல்வதன்றென்பது வெள்ளிடை மலை போல் விளக்கமுறும். அவர் குடும்பவலையுட் சிக்கி, மாமிமார் மாமன்மார் முதலிய உறவினர்க்கு அடங்கி அக்குடும்பத் தீயிடை நின்று துன்பங்களைப் பொறுத்தல்

எப் பயனைக் கருதி? அவர்கள் தமக்கெனெ வாழாப் பிறர்க்குரியாளர் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

ஒருவர் எல்லாநலங்களையும் பெற்று, உலக நிலையில் எத்துணைச் சிறப்பெய்தி யிருப்பினும், ஒரு சிறந்த பெண்மணியைத் தம் வாழ்க்கைத்துணை-யாய்த் தேராராயின், அவர் வாழ்க்கை விளக்க-முறாது. அவர் தந் நலங். கருதுபவரே யொழிய உலகநன்மையைக் கருதுபவராகார். அவர் தமக்-கென வாழும் தனி விலங்கு ஆவர்.

மாந்தரின் மனக்கோளை நிமிர்த்தி, பிறர் இன்பமும் துன்பமும் தமவாகக் கொண்டு அன்பு பாராட்டுமாறு மெள்ள அவர்தம் உள்ளத்தை அல-ரச் செய்து, படிப்படியாகப் பொறையுஞ் சாந்தியும் புகட்டிச் சிறிது சிறிதாக அவர்சித்தம் தெளிவித்து, தாமே எனும் நினைப்பும், தமக்கே எனும் இச்சையும் ஓய்வுறச் செய்து, எங்கும் நிறைந்த அப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கித் திளைத்திட, அவரைப் பக்குவஞ் செய்பவர் மங்கைய ரல்லரோ? இத்தகைய மங்கையரை அடக்குதற்கு உறுதுணை உடற்றுதல் என்று கருதி, மடமையால் தம்மையும் பிறரையுங் கெடுத்திடும் மனிதரின் நிலை இருந்தவாறு என்னே! அவர் பாலையும் நஞ்சாக்கும் பாதகரே யொழிய வேறல்லர்.

நம் பண்டைத் தமிழ்நூல்களை நன்கு ஆரா-யின், மகளிர் எய்திய நிலை இன்னதென்பதும், ஆடவர்பால் அமைந்த அவர்தம் தொடர்பு இஃ-தென்பதும் நன்கு விளங்கும்.

**சானகி**

கம்பரின் கவியுலகில் திகழும் மாண்புடை மங்கை யாய சானகியது கற்பின் திறத்திற் சிறிது நம் கருத்தைச் செலுத்துவோம். நாம் முன்னரே அழகுடைப் பொருளிடத்து அருங் குணங்கள் உண்டென்று அறிந்தோம். சீதையின் கற்பு முதலிய அருங்குணங்களை அறிதற்குமுன்னர், அவளுடைய அழகின் பெருக்கத்தை அறிதல் மிக்க அவசியமாகும்.

கோசிகனோடு இராமஇலக்குமணர் மிதிலைக்குச் சென்றனர் என்று சொல்ல வந்த கம்பர், சீதையை வருணிக்க வேண்டுமென் றெண்ணி,

"ஆதரித் தமுதிற் கோலேய்த் தவயவ மமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லால் மதனற்கு மெழுத
வொண்ணுச்
சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதின் மிதிலை
புக்கார்"

என்று கூறித் தாமெடுத்த விடயத்தை முடித்துச் செல்லும்போது நம் மனத்தி லூறும் இன்பத்திற் களவே இல்லை. உலகத்திலுள்ள எல்லாருடைய அழகையும் வரையறுத்துணர்ந்த மன்மதனே சீதையின் வடிவத்தைச் சித்திரத்தில் அமைக்க விரும்பி, அமுதில் தூரியத்தைத் தோய்த் தெடுத்து எழுதத் தொடங்கினாலும் அவளது அவயவங்களுள் ஒன்றையும் சரிவர எழுதவொண்ணாது என்று அவளது கட்டழகை விளக்கினார் கவிச் சக்கரவர்த்தி கம்பர். உலகத்தையே கவரும் உடற் பொலி-

வைக் கொண்ட சீதையின் அழகைக் கம்பரது அறிவாகிய ஓவியப் படங்களிற் கண்டு அறிஞர் இன்புறுவாராக.

பூவினைத் துறந்து, மிதிலையாம் பொன்னகர்ப் பிறந்து, அயோத்தியுட் புகுந்த சீதை இராமனோடு இன்புற்றிருக்கும் நாளில், மந்தரையின் சூழ்ச்சியால் இராமன் முடிபுனை திருவிழாத் தடைப்பட்டது. இராமன், மன்னவன் பணியைத் தலைமேல் தாங்கினவனாய், மரவுரியுடுத்து, அன்னையர் முதலியோர் தன் அருகே பொரும, இல்லம்நோக்கி வருவது கண்ட சீதை துணுக்குற் றெழுந்தாள். எழுந்த நங்கையை, அருகு வந்த மாமியர் கட்டியணைத்துக் கண்ணீர் பெருக்கினர். நடந்த செய்தியொன்றும் அறியாத அவ் வெழிலார் அன்னம் கண்களில் நீர் ததும்பக் கணவனை நோக்கி, "மன்னற்கு ஏதேனும் தீங்கு நேர்ந்ததோ?" என்று மயங்கி வினவினள். அதற்கு இராமன், "ஒப்புயர்வற்ற என் தம்பி பரதன் இப் பூமியைக் காப்பவனாக, யான் என் இரு முதுகுரவர் ஆணையைத் தாங்கிக் காடு சென்று வருவேன்; நீ ஈண்டுக் கலக்கமற் றிருப்பாயாக" என்று இசைத்தான். அப் பூங்கொடி, தன் கணவன் காட்டிற்குப் போக நேர்ந்ததே என்றேனும், அவன் ஆளுதற்குரிய பூமியை இழந்தனனே என்றேனும் வருந்தவில்லை. "யான் உன்னை விட்டு நீங்குவேன்; நீ வருந்தவேண்டா" என்று கொழுநன் கூறிய சொற்கட்கே அவள் பெரிதும் வருந்தினள். அவள், பின்னர் இராமனை நோக்கி, "நீவிர் இரு முதுகுரவர் ஆணையை மேற்கொண்டொழுகுதல்

சீரியதே. ஆனல் என்னை எக் காரணம்பற்றி ‘இவ்-விடத் திருத்தி’ என்றீர்?” என்று பெருமூச்-செறிந்து நின்ருள். அதனைக் கேட்ட இராமன், “பிறை பழி நுதலாய், உனது செம்பஞ்சூட்டிய சேவடிப்போது காட்டின் வெப்பத்திற் காற்ருது வருந்துமன்ருே? அனிச்சமும் நெருஞ்சியாக அஞ்சும் நின்னடிகள் கற்கள் உறுத்துதலைத் தாங்குவன-வல்லவே” என்ருன். அவன் கூறியதைச் செவி யேற்ற சானகி,

“பரிவி கந்த மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை ஊழி யருக்கனும்
எரியு மென்ப தியாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் கா”டென்ருள்.

“என்னிடத்து இரக்கமும் அன்பும் ஒரு சிறிது மின்றி, நீவிர் என்னை ஈண்டு விடுத்துச் செல்வதனல் எனக்கு நேரும் பிரிவுத்துயர் ஊழிக்காலத்துச் சூரியனைக்காட்டிலும் சுடுமன்ருே? இத்தகைய பிரிவுத்துயரினுங் கானகம் சுடுந் தன்மையதோ?” என்று வினவினுள். அதற்கு அவ் வெழிலுடைக் குரிசில், “முல்லையின் முகையும் முருக்கின் இதழுங் காட்டுங் கைரவ வாயாய், காட்டிற்கு நீ என்னேடு வருவதனல் விளையக்கூடிய தீமை இன்னதென்-பதைச் சிறிதும் நினைந்திலை; அதனல், வனத்திற்கு என்னுடன் வருதற்கு உறுதி கொண்டனை; நீ கான-கத்திற்கு வருதலால் எனக்குப் பெருந் துயரமே விளையும்” என்றனன். அங்ஙனம் அவன் கூறிய சொற்கள் புண்ணில் கனல் நுழைந்தாலெனச் சானகியின் செவியிற் புகுதலோடும், அவள், மனம் பொருதவளாய், “யான் உம்முடன் வருவதொன்றே

உமக்குத் துன்பந் தருவது; என்னைத் துறந்த பின்னர் உமக்கு இன்பமே" என்று தன் வருத்தந் தோன்றக் கூற, அதற்கு மறுமாற்றங் கூறுதற்கியலாத இராமன் அவளைக் கானகத்துக்கு அழைத்துச் செல்ல உடன்பட்டான்.

நாயகன் துன்புற்ற காலத்தும் அவனைப் பிரியாது அவனுடன் உறைதலே கற்புடைய மங்கையர்க் கழகென்பதைக்குறித்து அவள் நியாயமாகத் தருக்கித்த திறம் ஈண்டு நாம் கண்டு இன்புறுதற் குரியது.

சீதையுடன் இராமன் காடுறைவாழ்க்கையை மேற்கொண் டொழுகுநாளில் ஒருநாள், சூர்ப்பணகை இலக்குவனால் தனக்குற்ற குறையை இராவணனுக்கு அறிவிக்கவேண்டி அவனை நண்ணி,

"மஞ்சொக்கும் அளக வோதி
மழையொக்கும் வடித்த கூந்தல்
பஞ்சொக்கும் அடிகள் செய்ய
பவளத்தின் விரல்கள் ஐய
அஞ்சொற்க ளமுதி லள்ளிக்
கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தி னளவிற் றேனுங்
கடலினும் பெரிய கண்கள்.

"வில்லொக்கும் நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்
பல்லொக்கும் முத்தென் றாலும்
பவளத்தை இதழென் றாலும்
சொல்லொக்கும் பொருளொவ் வாவால்
சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலும்
நேருரைத் தாக வற்றே"

என்று சீதையின் அழகை இராவணன் அறிந்து அவளைக் காதலிக்குமாறு கூறிய பின்னர், அவ் வரக்கி, "அத்தகைய சீரிய அணங்கினை உன்பால் உய்ப்பக் கருதி எடுக்கலுற்ற என்னை, இராமன் தம்பி இடை புகுந்து, இலங்கு வாளான் மூக்கினை யரிந்துவிட்டான்; முடிந்ததென் வாழ்வு" என்றாள்.

சூர்ப்பணகை கூறியதைக் கேட்ட இராவணன், மூக்கிழந்த தங்கையால் தனக்கு நேர்ந்த கடும்பழியையுங் கருதானாய்த் தன் தங்கை கூறிய நங்கையின் அழகில் மதிமயங்கி, அந் நங்கையைத் தன் மனச் சிறையி லடைத்து மனப்பால் பருகி மகிழ்ந்தான்.

இராவணன் சீதையைத் தன் இதயமாஞ் சிறையி லிருத்திய பின்னர்த் தன் மனையகத்துஞ் செறித்தற் குன்னி, இராமஇலக்குவர் இல்லாத அற்றம் நோக்கி, மாயத்தால் அவளைக் கவர்ந்து இலங்கையிற் சிறைவைத்தான்.

சிறையிருந்த செல்வி, 'அந்தோ! பொன்மானாக வந்த மாயமானைக் கண்டு மயங்கி அதனைப் பற்றித் தருமாறு என் ஆருயிர்த் தலைவனை அதன்பின் விடுத்தேன். மானைத் தொடர்ந்து சென்ற மன்னனுக்குத் தீங்கு நேர்ந்ததென் றெண்ணிப் பாவியேன் பதைபதைத்து, என்னைக் காத்துநின்ற இளைய வீரனைக் கடிந்து, கணவன் சென்ற வழியே செலுத்தினேன். எவருடைய துணையுமின்றி எளியளாய்த் தனித்து நின்ற என்னைக் கள்ள அரக்கன்

கவர்ந்துவந்து கடுஞ்சிறை யிட்டனள். இராவணன்மனத்திற் புகுந்த என்னை இனி இவ் வுலகு ஏற்குமோ!'' என்று இன்ன பல அரற்றி, உலையின் மெழுகொத்து உருகிநின்றாள்.

இராவணன் அயனளித்த சாபத்தால் சீதையை வலிந்து அணைதற்கு நேர்ந்திலன்; எங்ஙனமாயினும், அவளுடைய சம்மதத்தைப் பெறுதலே கடனென்று எண்ணினன். மையல்நோயால் நையலுற்ற அம் மன்னவன் அவளிருக்கு மிடத்தை நாடிச் சென்றான்; சீதைபால் அவன் கொண்ட பெருங் காதல் அவனை அவள்பால் தாழ்ந்துபோகுமாறு பிடித்து உந்த, 'ஒரு பெண்ணிடத்திலா நாம் தாழ்வது!' என்று அவனுள்ளெழும் நாணம் அவனைப் பற்றி யிழுக்க, அவ்வரக்கன் ஒருவாறு தேறி, சீதையை யணுகி, "நீ என்மாட் டருள்புரிவையேல், என் வயமுள்ள இம் மூவுலகாட்சியும் நினக்கு அடக்க மாக்குவேன். இத்தகைய சீரிய செல்வத்தை நீ மறுப்பின் உன்னைவிட அறிவில்லாதவர் யாவர்?'' என்றான். அவன் கூறியவை காய்ந்த இரும்புநாராசம் போல் சீதையின் செவியை வருத்தின. உடனே அவள் தணியாச் சினத்தொடு தன தின்னுயிரையும் பொருட்படுத்தாது, இராவணன்முகத்தை நேரிற் பார்க்கவும் விரும்பாதவளாய், அங்குக் கிடந்த துரும்பை யெடுத்து இடையே போகட்டு அவனை அத் துரும்பாக மதித்து, "மகளிர்மனம் கெடாமலிருத்தற்கு அவர்தம் கற்பே சிறந்த கருவியாகும்; அத் தகைய கற்பையே சிறந்த கலனாய்ப் பூண்ட என்போலியர்க்கு ஏலாதவற்றை நீ பிதற்றுகின்றாய்; என் நாயகனுடைய பேராற்றலை

நீ உணர்ந்திலை! உனக்குத் தகாத வார்த்தைகளைக் கூறி நினது உயிரை யிழக்க நினைத்தியோ! ஏ! அறிவிலி, சிவன் உன்போலியர்க்கு வேண்டிய பெருவரங்களை அளிக்குமாறு பெருஞ் சிறப்புடையவனாய் இருத்தற்குக் காரணம் அவன் எப்போதும் அறநெறியிலேயே நிற்றலே யன்றோ? நீ அறத்தைக் கைசோர விடுத்து, தவவலியால் பெற்ற செல்வத்தை யிழந்து, சுற்றத்தோடு அழிதற்கு வழிதேடுகின்றனையே! இஃதென்ன அறிவீனம்! அன்றியும், நீ என் நாயகன்றன் ஆற்றலை அறிந்திலை. உன்னை ஆயிரங் கைகள் கொண்ட கார்த்தவீரியார்ச்சுனன் வாய்வழி குருதி சோரக் குத்தி வான்சிறை யிட்டனன் அன்றோ? அங்ஙனமிட்ட அவனைப் பரசுராமன் கொன்றான். அத் தகைய சிறந்த வீரனாகிய பரசுராமனே என் நாயகனாகிய இராமபிரான்முன் வலி யிழந்து ஒடுங்கிவிட்ட செய்தி நீ ஓர்ந்திலைபோலும். அஃதன்றியும், கடித்துக் கொல்ல வல்ல கொடிய நாகமும் மந்திரத்தைக் கேட்டு அதன்படி அடங்கி நடக்கும். அதுபோலக் கொடியவனாகிய நிற்கு, தக்க இன்ன, தகாதன இன்ன என்று இடித்துக் கூறுவார் நின் சபையில் உளராயின், நீயும் அவர் வார்த்தைக்கு அடங்கி நடக்கக்கூடும். ஆனால் உன்னிடத்திருப்பவரோ உன்னை அழித்தற்கே சமைந்துள்ளார். இதனை நீ யொரு சிறிதும் ஓர்ந்திலை" என்று அவனுக்கு அறிவுறுத்தினள்.

இராவணன் ஒரு பெண் தனக்கு அறிவு புகட்ட நேர்ந்ததே என்று நினைக்குந்தோறும் அவனுக்கு ஒருபால் வெட்கம் மேலிட, மற்றொருபால்

தனது கருத்து முற்றுப்பெறுமையின், வெகுளி பொங்க, அதனால் தன் தோள்கள் வளரவும், கண்களினின்று நெருப்புப்பொறி பரக்கவும், சீதையை உருத்து நோக்கி, "உன்னைப் பிளந்து தின்பேன்" என்றெழுந்தான். ஆனால், பிராட்டி-பால் கொண்ட மோகத்தினால் அவன் அடியெழாமல் சிறிது பின்வாங்கி ஒன்றுஞ் செய்யாது தவித்-தனன். பிறகு, அவன் ஒருவாறு தேறிச் சீதையை மீட்டும் தன்வயப்படுத்த முயன்று, அவளை நோக்கி, "கண்டோ எனு மொழிக் காரிகை யணங்கே, இராம-இலக்குவர் உன்னை இங்குநின்று மீட்டேகுவர் என்று நினது அறியாமையால் நீ எண்ணுகின்-றனை. நின்னை எடுத்துவந்தவன் யான் என்று அறிபவர் தேவரே யாயினும், 'எம் தலைவன்' என்று கூறிப் பின்வாங்குவரே யொழிய, என்னோடு பொருதற்கு ஒருநாளும் பொருந்தார்; அங்ஙன-மிருக்க, கேவலம் மனிதரான இராமஇலக்குவர் இங்கு வருதல் எங்ஙனங் கூடும்?" என்று கூறி, பின்னர், தன் எரிகதிர்வாளைப் பார்த்து, மீண்டுஞ் சீதையை நோக்கி, "நீ இன்னும் இரு திங்களுக்குள் எனக்கு இணங்காவிடின், இவ் வாளினால் உனக்கு நேர இருப்பதை உணர்ந்துகொள்" என்று அவளை அதட்டிச் சென்றான். இராவணன் சென்ற பிறகு, அவன் ஆணையை மேற்கொண்ட அரக்கிமார் அவ் வெழிலாரணங்கினை அச்சுறுத்தி அலைத்தனர்.

பிராட்டி இராமனைத் தவிர வேறு எவரையும் எண்ணிலள்; சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை

போன்ற அவன்திருமுகத்தையே உன்னினள்; தனக்குற்ற இன்னலை நினைந்து நகைத்தனள்.

“ இடுக்கண்வந் துற்ற காலை யெரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி நகுகதாம் நக்கபோழ்தவ்
விடுக்கணை அரியு மெஃகாம் இருந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை ஆண்மை வருபவந் துறுங்க லன்றே”

என்ற சிந்தாமணியின் சீரிய கொள்கையை அவள் சிந்தையுட் கொண்டாள். பின்னும் அவள், ‘கணவனைப் பிரிந்து கள்வன்ஊரில் இருந்தனள் என்று கற்புடைய மங்கையர் என்னைப் பழிக்க, யான் எங்ஙனம் உயிர்ப்பொறை ஆற்றுவல்! ஊனமொன்று நேர்ந்துழி மானமுடைய மங்கையர் மண்ணில் இருப்பரோ!’ என்று தனக்குள்ளே எண்ணினாள்.

“ மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் ”

என்ற வாய்மொழி கண்டாள்; பின்னர், எவ்வாற்றானும் உயிர்துறத்தலே தனக்கு உறுதி யென் றறிந்து, ஒரு குருக்கத்திமரச் செறிவைக் கிட்டினாள்.

சீதையின் மனநிலையை யொன்றியிருந் தறிந்த மாருதி, அவள் அருகு சென்று தன்னுருவினைக் காட்டி அவளுக்கு உண்மையை விளக்கி நின்றான். பின்பு அவன் இராமபிரானுடைய அவயவஇலக்கணங்களை நன்கு கூறி, அவனுடைய மோதிரத்தை

அவளுக்கு ஈந்தான். தன் நாயகன் ஆழியைப் பெற்ற சீதை,

" இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானுள்
பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்
குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்
உழந்துவிழி பெற்றதொ ருயிர்ப்பொறையு மொத்தாள்."

இக் கவி, சீதை இராமன்பால் செலுத்திய விழுமிய காதலை நன்கு விளக்குவதாகும். கணவனது ஆழியைக் கண்ட அக் கற்பரசி இன்ப ஆழியில் திளைத்தாள்.

பின்னர், மாருதி சீதையை நோக்கி, 'நலந் திகழ் மதியென விளங்கும் வதன மங்காய், நீ என் மெத்தென்ற மயிர் பொருந்திய புயமிசை இனிதிருப்பின், யான் உன்னை இடையில் தாழாமல் இராமபிரான் வைகுங் குன்றிடை உய்ப்பேன்" என்றான். அதற்குச் சீதை கூறிய மறுமாற்றம் பெரிதும் மதித்துப் பாராட்டற் குரியது.

மாருதி கூறிய மாற்றத்தைச் செவி யேற்ற சீதை, " நீ என்னை இராமன்பால் எடுத்தேகுதல் ஏற்புடைத் தன்று. யான் எல்லை யற்ற உலகங்கள் யாவையும் எனது சொல்லினுல் சுடும் ஆற்றலை உடையேன். ஆனுல், யான் அங்ஙனம் செய்வேனுகில், அஃது என் ஆருயிர்க்காதலற்குக் குற்ற மிழைத்தவாருகும்" என்னும் பொருள் தோன்ற,

" அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னுற்சுடு வேனது தூயவன்
வில்லி னுற்றற்கு மாசென்று வீசினேன் "

என்று கூறிப் பின்னரும் அவனை நோக்கி, "ஐய, என்னைக் கொண்டுசெல்லுதற் குரிய ஆற்றல் நின்-பாலுளதாயினும், நீயும் அடங்கி நடத்தலே நன்று" என்று கூறி, மாருதி செய்யத் துணிந்தது மாண்-புடையதன் றென மறுத்தாள். எவற்றையும் நன்கு தேர்ந்து முடிவினைக் கொள்ளும் சீதையின் சீரிய அறிவின் திறமும் கற்பின் மேன்மையும் வியக்கத் தக்கனவாகும். பின்னர், சீதை மாருதியைப் பார்த்து, "வாயுவின் மைந்த, நீ, ஐம்பொறிகளை-யும் அடக்கினவனுயினும், ஆடவனைத் தீண்டுதல் எனுங் குற்றம் எனக்குண்டாகுமாறு யான் உன் தோள்மிசை இவருதல் ஏற்புடைத் தன்று" என்-ருள். இதனுல் நாற்குணங்களுள் ஒன்ருகிய பயிர்ப்பு என்னும் மகடூஉக் குணம் இனிது விளங்கும்.

பிறகு, சீதை அநுமனை நோக்கி, "நீ எனது நிலையை இராமபிரானுக்குத் தெரிவித்து என்னை ஒரு திங்களுக்குள் சிறைமீட் டேகுமாறு சொல்வாய்" என்று தன் சூளாமணியைச் சிறந்த அடையாளமாக அவனிடம் கொடுத்தனுப்பினுள். வானரநாயகனும் சூளாமணியைப் பெற்று இரா-மன்பால் அடைந்தான்.

அநுமனைக் கண்ட இராமன் பேருவகை பூத்-தான். சீதையைப்பற்றி இராமனுக்கு அறிவிக்க நினைத்த அநுமன், ஒன்பான் இலக்கணமும் ஒருங்கு தேர்ந்தவ னுகையால், பொருள்விலக்கணியைப் புணர்த்தி,

"விற்பெருந் தடந்தோள் வீர
வீங்குநீ ரிலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்த ளாய
நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்றும்
இரும்பொறை யென்ப தொன்றுங்
கற்பெனும் பெயர தொன்றுங்
களிநடம் புரியக் கண்டேன்"

என்று குதூகலித்துக் கூறினன். அநுமன் சீதையை அசோகவனத்தில் ஒன்றியிருந்து கண்ட போது, அவன்கண்களுக்கு இற்பிறப்பு, இரும்பொறை, கற்பு என்னும் இம் மூன்றின் உருவாகவே அவள் தோன்றினள். அம் மூன்றின் கூட்டம் மிகவும் பொலிவுற்று யாண்டுங் காணக் கிடைக்காத இயல்பினதாய்ச் சிறந்திருந்தமை தோன்ற, 'களிநடம் புரிய' என்ருன். கம்பர், அநுமன் வாயிலாகச் சீதையின் தலையாய குணங்களைத் திரட்டிக்கூறி, அவள்மாண்பினைச் செவ்விதின் அறிவித்துள்ளார்.

அநுமன் அறைந்ததைக் கேட்ட இராகவன், கற்பகத்தருக்கள் நிறைந்த கனகச் சோலையில் வாடிய மேனியொடு வருந்திச் சிறையிருந்த பங்கயச் செல்வியை விடுவிக்க, வானரத் துணைகொடு இரக்கமற்ற அரக்கருடன் போராற்றி, அவர்தம் வெங் குலத்தை வேரறுத்தான். பின்னர், அயோத்தி அண்ணலும் இலங்கைவேந்தனும் நெடும்பொழுது கடும்போர் புரிந்தனர். வினையின் விளைவால் இராவணன் ஆவி சோர்ந்து பார்மிசை வீழ்ந்தான். தேவர்க்குந் தெரிவரிய தெய்வக் கற்பின் சீர்மகளைத்

தன் மனச்சிறையி லிட்ட இலங்கைமன்னனை இராகவன்வாளி, தலைமுதல் தாள்வரைத் துளைத்துச் சென்று, அவன்றன் மனத்தில் சீதைபால் ஆழ்ந்திருந்த காதலை அகழ்ந்தெடுத்து, அவ் வணங்கினை அகச்சிறையினின்றும் விடுவித்தது. பின்னர், இராகவன் தன்னுருயிராம் அமுதினை அசோக வனமாகிய புறச்சிறையினின்றும் மீட்டான். அகம், புறம் என்னும் அவ்விருவகைச் சிறையினின்றும் நீங்கிய அம் மாண்புடைய மங்கை கற்பரசியாய்க் களித்தோங்கினள். இவளன்றோ உலகினை உய்விக்கும் உண்மைப்பெண்ணரசி! உலகு இவள் நெறி பற்றி இன்புற்று உய்வதாகுக.

**கைகேயி**

கம்ப ரியற்றிய கவியுலகில் இன்னுஞ் சிற்சில பெண்டிர் போற்றுதற் குரியராவர். அவருள் கைகேயியின் குணத்தைச் சிறிது ஆராய்வோம்.

இராமன் காடுறை வாழ்க்கைய னதற்குக் கைகேயியே காரணம் என்று சிலர் அவள்மீது பழி சுமத்தி அவளை இழித்துரைப்பர். ஆனல் அவள் குணத்தை அவர்கள் நன்கு ஆராயின், அவளை அங்ஙனங் கூறத் துணியார்.

இராமனுக்கு முடிபுனை திருவிழா நடத்த முடிவு செய்திருப்பதை முதலிலே யறிந்த கூனி அதற்கு எவ்வாற்ருனும் இடையூ றிழைக்க வெண்ணி, கைகேயியின் அரண்மனையை அடைந்தாள். அங்குப் பாற்கடலின் நாப்பண் இரத்தினங்களைப் பூண்டு, நளினங்களைப் பூத்ததோர் பவளக்

கொடி போன்று கைகேயி பாயலின்மீது துயிலு வதைக் கண்டு, அவளருகு அணைந்து, அவள்சீறடி- யைத் தன் கைகளால் தீண்டினுள். தீண்டலும் கண்விழித்த கைகேயியைப் பார்த்த கூனி, "விடங்- கொண்ட பாந்தள் வந்தணுகும்வரை ஒளி விரிக்- கின்ற திங்களேபோல், பேரிடர் நின்னைப் பிணிக்க நண்ணவும், மகிழ்ச்சியோடு உறங்குதியோ?" என்றனள். அதனைக் கேட்ட கைகேயி, "புகழ்தற்குரிய புதல்வரைப் பெறுதலால், பெற்றோர் துன்பத்தி- னின்றும் நீங்கி இன்பத்தை யெய்துவ ரென்பர். வேதமே அனைய இராமனைப் பயந்த எனக்கும் இட ருண்டோ?" என்று கூனியை வினவினள். கூனி, கைகேயிக்குக் கோசலைபால் பொறாமையை உண்- டாக்க வெண்ணி, அவளைப் பார்த்து, "நின்னலங்- களும் செல்வமும் ஒழியுமாறு, உன் மாற்றாள் கோசலை மதியின் வல்லமையால் எல்லா நலங்களையும் எய்திவிட்டாள். வரிசிலை இராமன் நாளையே கோமுடி சூடப்போகின்றான். இதனை நீ அறிந்துகொள்" என்றாள். அவள் கூறிய மாற்றத்தைச் செவியேற்ற கை- கேயி, வேற்றுமை ஒரு சிறிதும் உறாது, மனத்துக்- கண் மகிழ்ச்சி பொங்கியவளாய்த் தன் மனக்கினிய செய்தியைத் தெரிவித்த அக் கூனிக்குச் சிறந்த- தோர் இரத்தினமாலையை நன்கொடையாக நல்கி- னள். கைகேயி மாற்றவள் மைந்தனைத் தன் மகனைக் காட்டிலும் பன்மடங்கு அன்புடன் நேசித்தாள் என்பதை இச் செயலொன்றே நன்கு விளக்குவ- தாகும். இரத்தினமாலையைக் கையில் வாங்கிய அக் கூனி தன் கண்களினின்றும் நெருப்புப் பொறி

சினந் விழித்துப் பெருமூச்செறிந்து, கைகேயியைப் பலவாறு தெழித்து, அவள் நல்கிய அம் மாலையை நிலங் குழியுமாறு எறிந்தனள்; பின்னர் அவள் பல விதப் போலிநியாயங்களைக் காட்டி, அப் புனித மங்கையின் மனத்தை மாற்றப் புன்மொழி சில புகன்றனள். கைகேயி தன் தனயன் பரதன்பால் செலுத்திய அன்பினைக்காட்டிலும் இராமன்பால் மிக்க அன்பைச் செலுத்திவந்தனளாகையால், கூனியின் கொடுஞ்சொல் அவள்சினத்தைப் பெருக்கியது. பின்னர் அவள் கூனியைப் பார்த்து,

"எனக்கு நல்லையு மல்லைநீ என்மகன் பரதன்
தனக்கு நல்லையு மல்லையத் தருமமே நோக்கின்
உனக்கு நல்லையு மல்லைவந் தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய்.

"போதி என்னெதிர் நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதி யாதிது பொறுத்தனன் புறஞ்சில ரறியின்
நீதி யல்லவும் நெறிமுறை யல்லவும் நினைந்தாய்
ஆதி யாதலின் அறிவிலி அடங்குதி என்றாள்."

இங்ஙனம் கைகேயி கூனியைத் தெழித்துக் கூறிய சொற்களை நாம் நன்கு ஆராயின், அவள் இராமன்பால் செலுத்திய பேரன்பு நன்குவிளங்கும். மாற்றவள்மைந்த னென்றும் தன்மைந்த னென்றும் ஒருசிறிதும் வேற்றுமை யின்றிக் குடும்பத்தின் இன்பநிலையைப் பெருக்குவான் அவள் செலுத்திய அன்பின் விழுப்பம் என்னே!

விடாமுயற்சியிலும் சூழ்ச்சித்திறனிலும் துறைபோய அக் கொடிய கூனி கைகேயி கூறிய கடு-

மொழிகளைப் பொருட்படுத்தாது, அவளைப் பார்த்து, "கேகயன் மகளே, இராமன் அரசு புரிவானாயின், கோசலை நினக்குத் தருஞ் சிறுபொருளைக் கொண்டன்றோ நீ வாழ்தல் வேண்டும்? அங்ஙனம் வாழும் நின்னை, வறுமையால் பெருந்துய ருழந்தவர் அணுகி இரப்பராயின், நீ நின் மாற்றாளை வேண்டி ஈதியோ? அன்றி, ஒன்றுங் கொடுக்க இயலாதிருப்பதுபற்றி வெள்குதியோ?

"சாதலி னின்னாத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை"

என்றதை யுன்னி மாண்டு போதியோ? அல்லது அவர்க்கு 'இல்லை' என்று கூறிக் கொடாதிருப்பையோ? நீ எங்ஙனம் வாழ்தி? இஃதன்றியும், உன் தந்தையோ, அல்லது உன்னை ஈன்றாளோ, உன் சுற்றமோ, வறுமை யுற்றுத் தங் குறை போக்குவான் நின்பால் அணுகுவராயின், அவர் காண்பது நின் செல்வமோ? அன்றி, நின் மாற்றவள் செல்வமோ? அஃதன்றியும், சீதையின் தந்தை தயரதனுடைய உறவை உன்னி நின் தாதையின்மீது படையெடுத்துச் சென்றிலன். அவன், தன் மருமகன் அரசுக்கு வருவனாயின், உடனே உன் தந்தையின் அரசைக் கைப்பற்றுவான். அதனால் நின் தகப்பன் அரசச்செல்வத்தை யிழந்து பெரிதும் வருந்துவான். ஆகவே, பெற்றோரின் பெருந்துன்பிற்குக் காரணமான நீ பெரும்பழிக்குப் பாத்திரமாவாய்" என்றாள்.

உடலேயன்றி உள்ளமுங் கோடிய அக் கொடிய கூனியின் ஆற்றல், கைகேயியின் அறிவினை

விஞ்சியது. பளிங்கையும் பழித்த கைகேயி-நெஞ்சு மந்தரையின் புன்மொழிகளால் களங்க முற்றது. முன்னரே அரக்கரைக் கொல்லுமாறு இமையோர் திருமாலை வேண்டி, வரம் பெற்றிருத்-தலால், அரக்கர்பாவமே கூனியாய் வந்து கைகே-யிக்குப் போதிக்க, இராமனிடத்துப் பேரன்பு கொண்டிருந்த கைகேயியின் மனம் அவனைக் கானகம் புகுத்துமாறு திரிந்தது. மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயியின் மனம் மாறுபடாதிருப்-பின், சிறையிருந்த செல்வியின் ஏற்றத்தை உலகு எங்ஙனம் உணரும்? கைகேயியின் மனத் திரிவும் உலகிற்குப் பெரியதோர் நன்மையை நல்கியதென்-பர் நல்லறிவுடையோர்.

## தாரை

நல்லமைச்சரைப் போன்று, வருந் தீங்கினைத் தம் நாயகருக்கு அறிவிக்கும் ஆற்றலமையப் பெற்-றவர் மங்கையரென்பது இராமாயணத்தில் அறியக் கிடக்குமோர் அருஞ்செய்தி யாகும்.

இராமபிரானுடைய துணைவலியைப் பெற்ற சுக்கிரீவன், அண்டகோள முழுதும் அதிரும்படி ஆரவாரஞ் செய்து, தன் தோள்களைத் தட்டி, வலிய வாலியைப் போருக்கு அறைகூவி யழைத்த-போது, வாலியும் உருத்தெழுந்து அமருக்கு முனைந்து நின்றான். அவ் வமயம் வாலியின் வாழ்க்-கைத்துணையாகிய தாரை, அவன் கண்களினின்றுந் தோன்றுங் கனலில் தன் கரிய கூந்தல் கருகுமாறு அவன்முன் போந்து அவனை விலக்கினாள். உடனே

வாலி தாரையை நோக்கி, "மலைகளில் விளையாடும் சிறந்த மயில் போன்றவளே! விலக்கலை; என்னை வலியப் போருக்கு அழைக்கின்ற அச் சுக்கிரீவனது வன்மையைச் சிதைத்து, அவன் இன்னுயிர் குடித்து விரைவில் மீள்குவல்" என்றான். அவன் கூறியதைக் கேட்ட தாரை அவனடி பணிந்து, "கொற்றவ, நின் குவவுத் தோள்களுக்கு இது-வரை குழைந்தோடிய சுக்கிரீவன், இன்று புதிதாக வேறோர் உடல்வன்மையைப் பெற்றிலன்; அல்லது, தனது பிறப்பொழித்து வேறொரு பிறப்பெடுத்-திலன். அங்ஙனமிருக்க, அவன் இன்று நின்னோடு போர்புரிதற்கு விரும்பி நிற்றலால், யாதோவொரு சிறந்த துணையைப் பெற்றுளான் என்று யான் ஐயுறுகின்றேன்" என்றாள். அதற்கு வாலி, தாரையை நோக்கி, "வலம்புரி புறத்தெழு வதன மங்காய், மூன்றுலகும் என்னுடன் முனையினும், அவை யெனது வன்மைக் காற்றாது தொலைவுறும் என்பதை நீ அறிந்திலைபோலும். அன்றியும், தேவர்கள் அசுரர்துணைகொடு பாற்கடல் கடைந்துழி, அமுதம் எழாமையின் சோர்ந்தகாலை, யான் அப் பாற்கடலைத் தயிரெனக் கடைந்து அவர்க்கு அமுதம் அளித்ததை நீ மறந்தனையோ? அஃதன்றியும், என்னை யெதிர்ப்போர் எவராயினும், அவருடைய வரத்திலும் உரத்திலும் பாதியளவு யான் எய்துமாறு பெற்றுள்ள வரத்தையும் நீ மறந்-தனையோ?" என்றான். தாரை, வருந் தீங்கை நன்குணர்ந்தாளாகையால், கொழுநன் கூறிய-வற்றை மனத்துக் கொள்ளாதவளாய், முடிவாக

ஒரு சொல் கூற நினைந்து, "என் ஆருயிர்த் தலைவ, இராமன் என்பவன் சுக்கிரீவனுக்கு இன்னுயிர்த் தோழனாய்ப் பொருந்தி நின்னுயிரினைக் கொள்ளவே வந்துளான் என்று நம்பால் மிக்க அன்புடையார் கூறியுள்ளாராகையால், இப்போது நீ போதல் தவிர்தி" என்றாள்.

'கேடு வரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே' என்ற முதுமொழிப்படி, வாலி தாரை கூறியவற்றைப் பொருட்படுத்தாது, தம்பியோடு அமராற்றி, இராமனுடைய கணைக்கு இலக்காயினான். வாலி தாரையின் வார்த்தையைத் தட்டி நடந்ததனால், முடிவில் தன்னுயிரினையே யிழக்க நேர்ந்தது. தூக்கி வினை செய்தலில் மங்கையர் மிக்க ஆற்றல் வாய்ந்தவ ராகையால், ஆடவர் அவர் நன்னெறிபற்றி யொழுகுவராயின் உய்வரென்பது ஒருதலை.

**கண்ணகி**

பெண்களின் வீரம், மானம், கற்பு முதலிய அருங்குணங்களை இளங்கோவடிகள் யாத்த சிலப்பதிகாரத்தில் கண்ணகிமாட்டு நாம் பரக்கக் காணலாம்.

மலைமகள் அருளும், கலைமகள் அறிவும், கமலையின் எழிலும் ஒருங்கு வாய்ந்த கண்ணகி செவ்வேள் போன்ற இளமையும் செம்மையும் பொருந்திய கோவலனை மணந்து, அறவோர்க் களித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க் கெதிர்தல் முதலிய

நல்லறங்களைக் கடைப்பிடித்து, இல்லறத்தை இனிது நடத்தினுள்.

சின்னுட் கழிந்த பின்னர், கோவலன், கண்ணகியின் இன்பத்தைத் துறந்து, மாதவியின் அழகிற் கிரையாகி அவளோடு இன்புற்று வாழ்ந்து வந்தான்.

கணவனைப் பிரிந்த கண்ணகி கவலைக்கடலுள் மூழ்கினுள். பஞ்செனச் சிவக்கு மவள்பாதம் அழகிய சிலம்பினை அறவே மறந்தன; மதி யனைய திருநுதல் திலகம் இழந்தது; மையிருங் கூந்தல் நெய்யணி நீங்கியது. நாயகன்பிரிவால் நேர்ந்த துயரம் அவளுள்ளத்தை உலைவாய் நெருப்புப் போல உருக்கி வருத்தியது. இஃதன்றோ கணவனைப் பிரிந்த கற்புடையார்செய்கை.

சின்னுட்கழிந்தபின்றை, மாதவி மற்றொருவன் மீது மனம்வைத்தாள் என்று கோவலன் வினைவயத்தால் தவருக எண்ணி, அவளிடத்து வெறுப்புற்றுத் தன்மனைவி கண்ணகிபால் அடைந்து, " கண்மணீ,

" விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந்
துளக்கற நாடின்வே றல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே அறுமே அவரன்புங்
கையற்ற கண்ணே அறும் "

என்பதை நான் நன்குணர்ந்தேன். விண்ணுலகத்துத் தேவரால் வணங்கப்படும் தாமரைக்கண்ணனுகிய கரிய மாலாயினும், பொருளொன்றில்லை-

யேல், அவனைப் பொதுமகளிர் தமது கையாற் கும்-பிட்டு நீங்குவர். பொருளையே பெரிதும் விரும்பும் விலைமாதரின் பொய்யொழுக்கத்தை மெய்யெனத் தேர்ந்து, உன்னைப் பிரிந்து சின்னாள் மயங்கி வாழ்ந்-ததனால் வறுமையுற் றுழந்தேன். நினது காற்-சிலம்பை விற்று, அதனையே முதற்பொருளாகக் கொண்டு வாணிகம் செய்து, இழந்த பொருளைப் பெறுவேன். நீயும் என்னோடு மதுரைக்குப் புறப்படு" என்றான். கண்ணகியும் அவன்சொற்களுக்கு இணங்கி அவனோடு புறப்பட்டாள்.

கோவலனும் கண்ணகியும் வழியில் கவுந்தியடி-களின் துணையால் நல்லொழுக்க மமைந்த மாதிரி-யின் உறவினைப் பெற்றனர். கோவலன் தன் மனைவியை மாதரிபா லிருத்தித் தான் அவளது காற்-சிலம்பை மதுரையில் விற்றுவர நினைந்தான். அவன் அவ்வாறு செல்வதற்கு முன்னர், தன் மனத்திற் கிசைந்த மனைவியை நோக்கி,

"குடிமுதற் சுற்றமுங் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கும் ஆயமு நீங்கி
நாணமு மடனு நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி
சீறடிச் சிலம்பி னொன்றுகொண் டியான்போய்
மாறி வருவன் மயங்கா தொழிக"

என்று கூறினன். இங்ஙனம் கோவலன் தன்

மனைவியைப் புகழ்ந்து கூறியவற்றை நோக்குழி, அவன் தன் மனைவியை எத்துணை உயர்வாகக் கருதினான் என்பது நன்கு விளக்கமுறும்.

கோவலன் கண்ணகிபால் விடைபெற்று, மன்றங்களை யெல்லாம் கடந்துபோய், மாதர்வீதியையுங் கடந்து, கடைத்தெருவின்வழியே சென்றான். அவ் வழியில் நூறு பொற்கொல்லர் பின்னே வர, அவர்களுக்குத் தலைவன்போல் ஒருவன் சட்டையணிந்து, கையில் கோல்கொண்டு முன்னே வந்தான். அவனைக் கண்ட கோவலன், 'இவன் மன்னனால் மதிக்கப்பெற்ற பொற்கொல்லன்' என்றெண்ணி அவனைக் கிட்டி, "அரசி அணிதற்குரிய சிலம்பினை நீ விலைமதித்தற்கு வல்லையோ?" என்று தன்பாலுள்ள காற்சிலம்பைக் காட்டினான். பொற்கொல்லன், மாணிக்கமணியோடு வயிரமழுத்தி உட்கரு வமைந்த அச் சித்திரச் சிலம்பின் செய்தொழில் அருமையை உற்று நோக்கித் தான் முன்பு அரசனிடமிருந்து கவர்ந்த அச் சிலம்பின் களவு வெளிப்படுமுன், கோவலன்மீது குற்றஞ் சாற்றிப் பிழைத்தலே சதுர்என் றெண்ணி, அவனைப் பார்த்து, "இச் சிலம்பு அரசமாதேவி அணிதற்கே யுரியது; ஆகையால், யான் இதனை அரண்மனைக்குக் கொண்டுபோய்த் திரும்புவேன்; அதுவரை நீ ஈண்டிரு" எனக் கூறி அரண்மனையை அணுகினான். அத்தருணம் அரசன் தன் தேவியின் ஊடல் தணிப்பான் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். அங்ஙனம் சென்றுகொண்டிருந்த அரசனைப் பொற்கொல்லன் கண்டு

வணங்கி, "மன்னவ, காவலாளரின் கண்களை மயக்கித் தேவியின் காற்சிலம்பைக் கவர்ந்த கள்வன் எனது சில்லைச்சிறுகுடிலில் அகப்பட்டுள்ளான்" என்றான். மதிமயங்கிய காவலன், ஊர்காப்பாளரை நோக்கி, "இராசமாதேவியின் காற்சிலம்பு அக் கள்வன் கையில் காணப்பெறின், அவனைக் கொன்று சிலம்பினைக் கொணர்க" என்று ஆணை கூறி அகன்றான். அதனைக் கேட்ட பொற்கொல்லன், அகமகிழ்ந்து, வீரர்களோடு சென்று, கோவலனைக் கண்டு அவன்மீது குற்றஞ் சாற்ற, ஆங்குநின்ற ஒரு கல்லாக் களிமகன் கோவலன் உடம்பைக் குறுக்கே வெட்டினான்.

கோவலன் கொலையுண்ட செய்தி ஊர்முழுதும் பரவியது. அச் செய்தி யறிந்த ஒரு மாது, மனம் பொறாதவளாய்க் கண்ணகியைக் கண்டு, "அரண்மனையில் களவுபோன அரசியின் காற்சிலம்பை ஒருவன் களவுசெய்தான் என்று, அவனை அரசனுடைய காவலாளர் கொலைசெய்தனர்" என்றாள். கொலை என்ற அச் சொல் கண்ணகியின் காதிற் படுதலும் அவள், கொலையுண்டவன் தன் நாயகனே என்றெண்ணி, அடியற்ற மரமேபோல் படிமிசைச் சாய்ந்தாள்; ஊதுலைக் குருகின் உயிர்த்து வெதும்பினாள்; கறவையை யிழந்த கன்றேபோல் கலங்கினாள்; 'அம்மகோ!' என அரற்றினாள். 'என் ஆருயிர்த்தலைவ, நீ எங்குற்றனை!' என்றேங்கினாள். 'மன்னவன் தவறிழைப்ப, இம் மன்பதை என் கணவன்மேல் பழிதூற்றுமாறு, பாவியேன் எங்ஙனம் வாழ்வேன்!' என்று வானத்-

துப் படர்தரும் பருதியைப் பார்த்து, "ஏ! செங்கதிர்ச்செல்வ, இவ் வுலகில் நீ அறியாத பொருளொன்றில்லை. என் கணவன் உண்மையில் கள்வனே?" என்று வினவினள். அதற்கு அப் பங்கய நாதன், ஆயர்குல மக்களெல்லோரும் கேட்குமாறு "உன் கணவன் கள்வனல்லன்; அவனைக் கள்வனென்று பழி சுமத்தியதனுல், இவ் வூர் தீயினுல் அழிவுறும்" என்று அசரீரியாய்க் கூறினுன்.

அருக்கன் அறைந்ததைக் கேட்ட கண்ணகி தெளிவினை யடைந்து, தனது மற்ருெரு காற்சிலம்பைக் கையகத் தேந்தி மதுரையுட் புகுந்தனள். செல்லும் வழிகள்தோறும், அவள், 'ஏ! பாவிகாள், என் கணவன்கையி லிருந்த சிலம்பினைக் கவர்ந்து கொள்வதற்கன்ருே அவனைக் கொன்றீர்கள்! அவன் உண்மையில் கள்வனல்லனே. யான் கற்புடையவளாயின், என் கணவனை உயிரோடு கண்டு, அவன்றன் கனிந்த சொற்களைக் கேட்பேன்; அங்ஙனம் யான் செய்யத் தவறின் என்னை உலகு இழிகுலமக ளென்று இகழ்க' என்று வஞ்சினம் புகன்று, தன் கணவன் இறந்து கிடந்த இடத்தைக் கிட்டினுள். காதலன்மாட்டுக் கனிந்த அன்புள்ள அக் கற்புடைக் காரிகை, வெட்டுண்டு கிடந்த கோவலனைக் கட்டி யணைத்துக் கண்ணீருகுத்தாள்; அவன் குருதிவெள்ளத்தில் தன் கூந்தலை நனைத்தாள்; "பொன்னுறு திருமேனி பொடியாடிக் கிடப்பதோ! தார்மலி மணிமார்பந் தரை மூழ்கிக் கிடப்பதோ!" என்று ஏங்கினுள்; 'இம் மதுரைமா நகரில் கற்புடைப் பெண்டிரும் உண்டுகொல்!' என்று தேம்பி யழுதாள்.

கோவலன் கண்ணகியின் அரற்றலைக் கேட்டவன்போன்று எழுந்து, தன் காதலியின் வாடிய முகத்தைக் கண்டான். பின்னர், அவன் அவளை நோக்கி, "முழுமதி போன்ற நின் முகம் வாடியதே!" என்று கூறித் தன் கைகளால் அவள்கண்ணீர் துடைத்தான். பெருந்துயர் தன் மார்பினைப் பிளக்க, கண்ணகி கணவனது சீரிய அடிகளைத் தன் இரு கரங்களால் பற்றி மிக வருந்தினாள்.

பின்னர், கோவலன் தன் புல்லுடலை நீத்துத் தெய்வவொளியுடன் பொன்னுலகு புக்கான். அதனைக் கண்ட கண்ணகி, 'இஃதென்ன மாயம்! என்னை மயக்கியது தெய்வமோ! ஒன்றுந் தெளியேன்' என்று மயங்கினாள். பின்னர், அவள் மானம்மேற்கொண்டவளாய், 'என் கணவனை வீணே கள்வனென்று பழி சுமத்திய காவலனை நேரிற் கண்டு, என் கணவன் குற்றமற்றவன் என்பதை உலகறிய நிறுவுவேன்' எனத் தனக்குள்ளே உறுதி பூண்டு அரசன் அரண்மனையை அணுகினாள்.

பாண்டியன் தன் தேவியோடு அரியணையில் அமர்ந்திருப்புழி, அரண்மனைவாயிலில் கண்ணகி சென்று நின்று, ஆங்கிருந்த வாயிற்காப்பாளனை விளித்து, "ஏ! வாயிற்காவலோய், ஒற்றைச்சிலம்பைக் கையகத்தேந்திக் கணவனை யிழந்த காரிகை யொருத்தி அரண்மனைவாயிலில் வந்துளாள் என்று அரசற்கு அறிவிப்பாய்" எனக்கூறினள். வாயிற்காப்பாளனும் அங்ஙனமே அவள் கூறியதை அரசனுக்கு அறிவிக்க, அரசன் அவளை உள்ளே

அழைத்துவர உத்தரவளித்தான். கற்பிற்கரசியாகிய கண்ணகி, கணவற் குற்ற கடுந்துயர் பொறுது மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக் கண்ணீராடிய மார்பினளாய் வந்து நின்ற கோலத்தைக் கண்ட வேந்தன், "நீர் வார் கண்ணை யுடையாய், நீ யார்?" என்றனன். அதற்குக் கண்ணகி,

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார்என் பதியே அவ்வூர்
ஏசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி
வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்
சூழ்கழன் மன்ன நின்னகர்ப் புகுந்திங்கு
என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதென் பெயரே"

என, கேட்ட பார்த்திபன், "பெண்ணணங்கே, கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று; வெள்வேல் கொற்றமே யாகும்" என்றான். அங்ஙனம் அவன் கூறியதைக் கேட்ட கண்ணகி, "என் கணவன் குற்றமிழைத்தவ னல்லன் என்பதை நிலைநாட்டவே வந்துளேன். அவன் கையகத்திருந்தது களவாடிய சிலம்பன்று; அஃது என் காற்சிலம்பே. என் காற்சிலம்பிற் செறித்துள்ள பரல் மாணிக்கம்" என்றனள். அதனைக் கேட்ட அரசன், "எம் தேவியின் சிலம்புள்ளே யிருப்பன முத்தே. அச் சிலம்பினை இப்போதே ஆய்வோம்" என்று கூறி, கோவ-

லன்கையினின்றும் கொணர்ந்த அச் சிலம்பினைக் கொணர்வித்துக் கண்ணகியின் முன்னே வைக்க, உடனே அவள் அதனை யெடுத்து உடைத்தனள். உடைத்ததும், அதினின்றும் மாணிக்கங் தெறித்து வெளிப் போந்தது. அதனைக் கண்ட மன்னவன், தாழ்ந்த குடையனாய்த் தளர்ந்த செங்கோலனாய்,

"பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
யானோ அரசன்! யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகஎன் னாயுள்"

என்று கூறி, அரியணைமீதிருந்து தரைமீது உருண்டு உயிர்நீத்தான்.

மன்னவன்மாபெருந்தேவியும், 'தாய்தந்தையரை இழந்தோர்க்கு அம் முறை சொல்லிப் பிறரைக் காட்டலாகும்; கணவனை இழந்தோர்க்கு அங்ஙனம் காட்டலாகாது' என்று கூறி, தன் கணவன் இணையடி தொழுது, படிமிசை வீழ்ந்து ஆவி சோர்ந்தாள்.

கண்ணகி, தன் கணவன் அநீதியாய்க் கொலையுண்டமை குறித்து அடங்காத் துயருற்று, 'யான் உண்மையில் கற்புடைய ளாயின், இம் மதுரையை அழிப்பேன்' என்று வஞ்சினங் கூறி மதுரையை எரித்தனள். பின்னர், அவள் வையையாற்றின் கரைவழியே மேற்றிசை நோக்கிச் சென்று, மலைநாட்டையடைந்து, ஆங்குத் திருச்செங்குன்றென்னும் மலைமீதேறி, ஒரு வேங்கைமரத்தின்கீழ் பதினான்கு நாள் இருந்தாள். அப்போது தேவர் பூமாரி பொழிய,

ஆகாயத்தினின்றும் ஓர் அழகிய விமானம் கீழ் இழிந்தது. அவ் விமானத்தில் தெய்வ வடிவுடன் கோவலன் பொலிவுறக் கண்ட கண்ணகி, மிக்க களிப்புடையளாய் அவனோடு விண்ணுடு புக்காள்.

பெண்கள் தமக்குரிய வீரம், மானம் முதலிய நற்குணங்களுக்கு இழுக்கு ஒருசிறிது நேரினும் அதனைப்போக்கி, அக்குணங்களைக் காத்தலில் மிக்க வல்லமை யுடையவர் என்பதைக் கண்ணகியின் அருஞ்செயல் நன்கு விளக்குகின்றது. தன்னுயகனைக் கள்வன் என்று பிறர் கூறப் பொருத கண்ணகி, அவன் கொலையுண்ட பின்னரும் அவனை அப் பொய்க்குற்றத்தினின்றும் உலகறிய விடுவிப்பதே கடனென்று கொண்ட மனவுறுதி என்னே! கொழுநர் இறந்தபின்னரும் பெண்கள் அவர்பால் தங்கடனாற்றி நிற்பரெனின், அவர்தம் பெருமையைப் பேசலும் ஆகுமோ?

**மாதவி**

சோழநாட்டில், காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்குத் திருவிழாக் கொண்டாடும் நற்றினம் வந்தது. அந் நாளில், அரசனது ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும், அரசகுமாரரும், பரதகுமாரரும் திரள்திரளாக வந்து இந்திரவிழாவைச் சிறப்புறச் செய்தனர். அவ் விழாவினை மாதவியுங் கோவலனும் கண்டு களிப்பெய்தினர். திருவிழா முடிந்த மறுநாள் புகார்நகரில் உறையும் மக்களெல்லாம் நீராடுவான் கடற்கரைக்குச் சென்றனர். கடல்-

விளையாட்டினைக் காண விரும்பி, மாதவியும் கோவல ஞேடு கடற்கரைக்குச் சென்றனள்.

காதலர் இருவரும் ஆங்கோர் புன்னைமரத்தின் நீழலில் இனிதமர்ந்திருக்கையில், மாதவி தன் கையி லிருந்த யாழினை முறைப்படி திருத்திக் கோவலன் கையில் கொடுத்தாள். கோவலன் மாதவி மகிழு மாறு பாடத் தொடங்கிஞன். அவன் பாடிய பாக்கள் அகப்பொருளில் தலைமகன் கூறும் மொழிகளா யிருந்தமையான்; அவன் தன்மேல் அன்பின்றி வேறொருத்தியை விரும்பினன் போலும் என்று மாதவி மயங்கி, புலவியால் யாழ் வாங்கித் தானுமோர் குறிப்பினள்போற் கானல்வரி பாடிஞள். அதனைக் கேட்ட கோவலன், 'இவள் வேறொருவன்மீது மனம்வைத்துள்ளாள்' என்று நினைத்து, அவளை இகழ்ந்து நீங்கினன்.

கடற்கரையில் தனித்து நின்ற மாதவி கையற்ற நெஞ்சினளாய்த் தோழியோடு தன் மனை புக்காள்; கோவலனுக்கு மனம் வேறுபடுமாறு தான் செய்ததை உன்னி மிக வருந்திஞள்; காதலனையே நினைந்து ஏங்கிஞள்; மாடத்தின்மே லிருந்த மஞ்சத்தில் மயங்கி வீழ்ந்தாள்; தனது இன்னுயிர்க் காதலன் இணையடிகளை மனத்தி லமைத்து, அவனைத் தொழுதாள். பின்னர், அவள் ஒருவாறு தேறித் தான் செய்த குற்றத்தை மன்னிக்குமாறு கோவலனுக்கு நிருபம் போக்க நினைந்து, செம்பஞ்சுக் குழம்பில் பித்திகை முகையாகிய எழுத்தாணியைத் தோய்த்து,

"எனதாருயிர் ஐய,

நின் அழகிய அடிகளைத் திக்கு நோக்கித் தொழு-கின்றேன். நீ குரவர்பணியை விட்டுக் குலப்பிறப்-பாட்டியொடு பொழுதுபுலருமுன் புகாரைத் துறந்து புறப்படுதற்கு வந்த பிழை என்னே? அஃதறியாது என் பிழைப்போ என்று யான் அழுங்குகின்றேன். என்பிழைப்-பெனினும், மகளிர்சொல் குற்றமருத தென்று திருவுளம்-பற்றல் வேண்டும்"

என்று மனங்குழைந் தெழுதிய கடிதத்தை நன்கு நோக்குழி, அவளது உண்மைக் காதல் இனிது விளங்கும்.

கோவலன் வினைவயத்தால் மதுரைமாநகரில் நெடுஞ்செழியனால் கொலையுண்ட செய்தியை யறிந்த மாதவி, அருமணி யிழந்த நாகமேபோல் ஆறாத் துயருற்றாள். பின்னர், அவள் தன் நற்றாயை விளித்து, "என் ஆருயிர்க் காதலன் கொலையுண்டா னதலால், யான் இவ்வுலக வாழ்க்கையை அறவே துறந்து, தவக்கோலங் கொள்ளத் துணிந்தேன். நீ என் மகள் மணிமேகலையை வான்துய ருறுக்கும் கணிகையர்கோலங் காணு தொழிக" என்று கூறிக் கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்து, பௌத்தப் பள்ளியை யடைந்து, துறவொழுக்கம் மேற்கொண்டனள்.

மாதவி துறவறத்தை மேற்கொண்டொழுகு நாளில், ஒருகால் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழா நடைபெற்றது. அவ் விழாவில் வழக்கம் போல், ஆடல்பாடலால் மக்களை மகிழ்விக்க,

மாதவி தன் மகள் மணிமேகலையுடன் வாராமை-யான், அவள்தன் நற்றாய் சித்திராபதி சிந்தா-குல மெய்தினள். பின்னர் அவள், மாதவியின் தோழியாகிய வயந்தமாலையை விளித்து, 'நீ மாதவி-பாற் சென்று, அவள் இந்திரவிழாவிற்கு வாராமை-பற்றி இவ்வூர் கூறும் பழிமொழியைக் கூறி வருக' என்று பணித்தாள். வயந்தமாலையும் மணிமேகலை-யொடு மாதவி யிருந்த் அணிமலர் மண்டபத்தை யணுகி, அங்கு வாடிய மேனியைத் தாங்கிய மாதவி-யைக் கண்டு, மனம் வருந்தி, "பொன்னே அனை-யாய், நீ நாடகமகளிர்க்கு நன்கனம் வகுத்த பல்-வகைக் கலைகளையும் விடுத்துத் துறவறம் பூண்ட-தனல், இவ்வூ ருரைக்கும் அலர்மொழி பெரிது" என்றனள். அதனைக் கேட்ட மாதவி வயந்தமாலை-யை நோக்கி,

"காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா வுயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்காது
இன்னுயி ரீவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயி னன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து"

என்று கூறி, பின்னும், "கணவன் கொலையுண்ட-தற்குப் பொருளாய் மிகச் சினந்து மதுரையை

யெரித்த பத்தினிக்கடவுளாகிய கண்ணகிமகள் மணி மேகலே, தவத்துறையிற் செல்லுதற் குரியளே யன்றி, மிக இழிந்த பரத்தைமைத் தொழிலுக்குச் சிறிதும் உரியளல்லள்; ஆகலான், அவளும் அங்கு வாராள்; நான் இங்கு அறவண அடிகளே வணங்கி, என் காதலன் மதுரையிற் கொலேயுண்ட-தனுல் எனக்கு நேர்ந்த பெருந்துன்பத்தை வருந்-திக் கூற, அதற்கு அவ் வடிகள்,

‘பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்ருே ருறுவ தறிக’

என்று நால்வகை வாய்மைகளேயும் ஐவகைச் சீலங்-களேயும் எனக் குபதேசித்து என்னேத் தவத்துறை-யுட் புகுத்தினுராகலின், யான் நின்ெனுடு வருதற்கு உரியளல்லேன்; இதனே நீ என் தோழிகளுக்கும் நற்ருய்க்கும் கூறுக" என்ருள். அவள் கூறியதைக் கேட்ட வயந்தமாலே, பெறற் கரிய மாணிக்கத்தைக் கடலில் வீழ்த்தியவர்போல் செயலற்றுச் சித்திரா-பதியிடம் சென்ருள்.

மாதவி பொதுமகளாயினும், அவள் தன் சீரிய ஒழுக்கம் நற்குடிப் பிறந்த நங்கைமார் அனைவரும் போற்றுந் திறத்ததன்ருே? அவள், கற்புடைய மங்-கையரை மூன்று கூறுபடுத்தி, அம்மூவர்தம் செயல்-களேயும் முறையே கூறி, தான் அம் மூன்று கூறி-னுள் முதற்கூறுட் படாமைக்குப் பெரிதும் வருந்தி நின்றதையும், உலகவாழ்க்கையை யறவே

வெறுத்து நின்றதையும் ஆராய்வுழி, அவள் ஒழுக்கத்திற் சிறந்த கற்பரசியென்பது இனிது விளங்கும்.

மணிமேகலை

தவ வொழுக்கத்தை மேற்கொண்ட மாதவியின் மகள் மணிமேகலை ஒழுக்கத்தையே தனக்கோர் உருவாகப் பெற்றவள். அழகு அவளைத் தவஞ் செய்து அடைந்தது. அவளழகைக் காணுங் காமனே தன் படைகளை யெறிந்து நடுங்குவனாயின், ஏனைய ஆடவர்செயலை அறைதலும் வேண்டுமோ ?

மாதவி தன் தோழி வயந்தமாலைக்குக் கோவலன் அநீதியாய்க் கொலை யுண் டிறந்ததையும், அதன் காரணமாய்க் கண்ணகி பெருந்துயருற்றதையும் உரைத்தபோது, அதனைக் கேட்டிருந்த மணிமேகலை, தன்னுடைய தாய்தந்தையராய கண்ணகிக்கும் கோவலனுக்கும் நேர்ந்த துயரச்செய்தி தன் செவிகளைச் சுட, மனங் கலங்கிக் கண்ணீருகுத்தாள். உகுத்த கண்ணீர், அவள் தொடுத்த மாலையை நனைத்தது. அதனைக் கண்ட மாதவி, அவள்கண்ணீரைத் துடைத்து, பின்னர், அவள் துயரை ஒருவாறு போக்க நினைந்து, “ இப் பூ மாலை உன் கண்ணீர்க்கலப்பால் தூய்மை யிழந்தது ; ஆதலின் வேறு மாலை தொடுத்தற்கு நீ சோலை சென்று புதுமலர் பறித்து வா ” என்றாள்.

மணிமேகலை, தன் அன்னையின் மொழிப்படிப் புதுமலர் பறிக்கத் தோழி சுதமதியோடு மலர் வனம் புக்கனள். அவள் மலர்வனம் புக்கதை

எட்டிகுமரனல் அறிந்த உதயகுமரன், அவ் வனம் நோக்கித் தன் தேரைச் செலுத்தினன். தேரொலி கேட்ட மணிமேகலை சுதமதியை நோக்கி, "உதய-குமரன் என்மேல் மிக்க விருப்புடையவனென்று மாதவிக்கு வயந்தமாலை சொல்லியதை யான் முன்-னமே கேட்டுளேன். இவ்வொலி அவன்தேரொலி போலும். இத் துன்பத்திற்கு யான் யாது செய்-வேன்" என்றனள். அதனைக் கேட்ட சுதமதி, அவளை ஆங்குள்ள பளிக்கறையுட் புகுத்தித் தாழிட்டு, தான் ஐந்து விற்கிடைத்தூரத்தே நின்-ருள். அங்ஙனம் நின்ற சுதமதியைச் சோலையுட் புகுந்த உதயகுமரன் கண்டு,

"* * * ஆருமி லொருசிறை
ஒருதனி நின்ரு யுன்றிற மறிந்தேன்
விளையா மழலை விளைந்து மெல்லியல்
முளையெயி றரும்பி முத்து நிரைத் தனகொல்
செங்கய னெடுங்கண் செவிமருங் கோடி
வெங்கணை நெடுவேள் வியப்புரைக் குங்கொல்
மாதவ ருறைவிட மொரீஇமணி மேகலை
தானே தமியளிங் கெய்திய துரை"

என்று வினவ, சுதமதி, உதயகுமரன் மணி-மேகலைபால் காதல் கொண்டுளானென் றறிந்து, அவன் எண்ணத்தை மாற்றக் கருதி, உடலின் இழிவை அவற் கெடுத்துரைத்தாள். அவள் கூறி-யவை அவன்செவியுட் புகுமுன்னர், பளிக்கறையி-னுள் இருந்த மணிமேகலையின் உருவம் அவன்கண்-களுக்குத் தோன்றியது. தோன்றிய உருவம் மணி-மேகலையே என் றுறுதி கொண்ட உதயகுமரன் பளிக்கறையுட் புகுதற்கு எண்ணி, அவ் வறையின்

சுவரைக் கைகளால் தடவிச் சுற்றி வந்தான். அப்பளிக்கறையின் வாயில் காணப்படாமையின், மணிமேகலையை அணுக நினைந்த அவன்முயற்சி வீணாயது. பின்னர், அவன் சுதமதியைப் பார்த்து, "மணிமேகலை எத் திறத்தினள்?" என்று வினவினான். அதற்குச் சுதமதி, "அவள் தவவொழுக்கமுடையவள்; சிறிதும் காமவிகாரமில்லாதவள். ஆதலின், நீ அவளை விரும்புதல் தக்கதன்று" என்றாள். அதனைக் கேட்ட உதயகுமரன், "அவள் எத்தன்மையளாயினும் எனக்கே உரியள்" என்று சொல்லிக்கொண்டு அவ் விடத்தைவிட் டகன்றான். உதயகுமரன் சோலையைவிட் டகன்றதும், மணிமேகலை பளிக்கறையினின்றும் வெளியே வந்து, சுதமதியை நோக்கி,

"கற்புத் தானிலள் நற்றவ வுணர்விலள்
வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்று
இகழ்ந்தன னாகி நயந்தோ னென்னாது
புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம்
இதுவோ அன்னாய் காமத் தியற்கை
இதுவே யாயிற் கெடுக தன்திறம்"

என்றனள். மணிமேகலை சுதமதியை நோக்கிக் கூறிய இம் மொழிகளால், அவளது மனமாகிய மதர்த்த யானை உதயகுமரன்மீது சென்ற தென்பதும், அங்ஙனம் சென்ற மனத்தை அவள் தனது அறிவாகிய சிறந்த அங்குசத்தால் அடக்கித் தன்வயப் படுத்தினாள் என்பதும் அறியக் கிடக்கின்றன. கடந்த ஞானியையும் கலக்கும் வன்மை வாய்ந்த காமம் தன்பால் அழிந் தொழியுமாறு, 'கெடுக தன்

திறம்' என்று அவள் கொண்ட மனவுறுதி என்னே!

உதயகுமரன் வினைவயத்தால் வெட்டுண்டிறத்தலான், மணிமேகலை சிறைப்பட நேர்ந்த காலத்து, அரசமாதேவி, தன் புதல்வன் உதயகுமரன் இறந்ததனுல் தனக் குண்டாய வருத்தத்தை வெளிப்படுத்தாமல் அடக்கியவளாய், 'மணிமேகலையை வஞ்சித்து வருத்துவேன்' என்று தனக்குள்ளே எண்ணி, அரசனை அணுகி, "மன்னவ, மணிமேகலையின் பிக்குணிக்கோலத்தைக் கண்டு தன் அறிவு வேறுபட்ட உதயகுமரன் அரசாட்சிக்கு உரியவனல்லன்; அவன் இறந்தது தகுதியேயாகும். மணிமேகலைக்கு நாம் விதித்த சிறை தகுதியன்று" என்ருள். அதனைக் கேட்ட அரசன், "நினது கருத்து அஃதாயின், அவளைச் சிறையினின்றும் விடுவி" என்றனன்.

இராசமாதேவி மணிமேகலையைச் சிறையினின்றும் விடுவித்து, அரண்மனையுள் அழைத்துச் சென்று, 'இவளை இவ்வூரிலுள்ளார் எல்லாரும் அடித்து வருத்தும்படி பித்தி யாக்குவேன்' என்று தனக்குள் எண்ணி, மயக்கு மருந்தொன்றினை அவளுக் கூட்டினள். மணிமேகலை மறுபிறப்புணர்ந்தவளாகையால், தன் அறிவிற் சிறிதேனும் மாறுபடாதிருந்தனள். பின்னர், அவ்வரசி அறிவிலியாகிய ஓர் இளைஞனை அழைத்து, "மணிமேகலையின் உடல் வேற்றுமை யுறுமாறு செய்து, அவள் உன்னைக் காதலித்ததாகப் பலர்க்கும் கூறுவாய்"

என்று அவனுக்குப் பொற்காசு கை நிறையக் கொடுத்தனள். அரசி கூறிய அத் தீச் செய்கைக்கு உடன்பட்ட அவ் வறிவிலி, மணிமேகலையின் இடத்திற்குச் சென்றான். அரசமாதேவியின் வஞ்சனையை யறிந்த மணிமேகலை வேற்றுரு எய்துவிக்கும் மந்திரமோதி ஆண்வேடங் கொண்டிருந்தனள். அங்ஙனம் அவள் இருந்ததைக் கண்ட அம் மதியிலி நடுநடுங்கி, 'அரசமாதேவியின் சூழ்ச்சியை யானறிந்திலேன்' என்று அவ்விடத்தைவிட்டகன்றான். அதனை யுணர்ந்த அரசமா தேவி, 'என் அருமந்த மகனை மயக்கி மாளச் செய்த மணிமேகலையை இனி உயிருடன் விடேன்' என்று சினந்து அவளைப் புழுக்கறையுட் புகுத்த, அவளும் ஊணொழி மந்திரத்தை யோதி, சிறிதும் வாட்டமற்றிருந்தாள். அதனைக் கண்ட காவலன்தேவி, மிக்க வியப்பு உற்று, நடுநடுங்கி, மணிமேகலையை நோக்கி, "மகனை யிழந்த பெருந்துயரால் யான் நிற்குப் பல் வகைத் தீங்குகளைப் புரிந்தேன். யான் செய்தவற்றைப் பொறுத்தருள்வாய்" என்று வேண்டிநின்றாள். உடனே மணிமேகலை, உதயகுமரனுக் குண்டாய தீங்கின் காரணத்தை அரசிக்குக் கூறி, "நீ சென்ற பிறப்பில் என் கணவனாய் இருந்த இராகுலனாகிய இவ்வுதயகுமரனை ஈன்ற தாயாகலான், நினது துயரைக் களைந்து, நின்னை நல்வழிப்படுத்தற்பொருட்டே யான் ஆகாயவழியே அகலுதலையும் வேற்றுருக்கொள்ளுதலையும் விழையாது, நீ எனக்கு இழைத்த துன்பங்களைப் பொறுத்திருந்தேன்" என்றாள். பின்னர், அவள் அவ் வரசியை நோக்கி,

" செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போர்
அல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லாம் அன்பொழி யார் "

என்று கூறி, ஞானமாகிய நன்னீர் கொடு அவட்குத் தன் மகனது பிரிவால் நேர்ந்த துயராகிய நெருப்பினை அவித்தாள்.

மணிமேகலையின் அறவுரையால் மனந் தெளிந்த மன்னவன்தேவி அவளை வணங்கினாள். அடக்கத்தையே அருங்கலனாய்ப் பூண்ட மணிமேகலை அதனைப் பொருளாய், " நீ என் மாமியா யிருத்தலேயன்றி இவ் வுலகினைப் புரக்கும் மன்னவன்மாபெருந்தேவியாயும் விளங்கலான், என்னை வணங்குதல் ஏற்புடைத்தன்று" என்று மிக்க பணிவுடன் கூறித் தான் அவ்வரசியை வணங்கினாள்.

உலகின் துயரைக் களைவான், தனக்கு நேர்ந்த இன்னலையுந் தாங்கி, அருந் தொண்டாற்றிய மணிமேகலையின் மனப்பான்மை யாவராலும் போற்றற்குரியது. இவளன்றோ உண்மைப் பெண்ணரசி! இத்தகைய பெண்மணிகளால் உலகு உய்யும் என்பது திண்ணம்.

**திரௌபதி**

வாழ்க்கையில் பெண்கள் தங் தலைவர்க்குத் துணையாய் நின்று, அவர்களை உய்விப்பதனாலன்றோ

நம் முன்னேர் அவர்களுக்கு வாழ்க்கைத்துணை என்ற பெயரை வழங்கினர்? ஆடவர் அறிவில் எத்துணை உயர்ந்தவராயினும் இடுக்கணென் றுற்ற காலை, அந் நிலையினின்றும் பிழைத்துச் செல்லு-தற்கு வழி யறியாது திகைக்கும் காலமும் உண்டு. அக்காலை, பெண்டிரே அவரைப் பிழைப்பிப்பவ-ராவர். அத்தகைய பெண்களின் துணையற்ற ஆட-வர் உலகில் உய்வ தரிது.

பாண்டவர் ஐவர்க்கும் வாழ்க்கைத்துணையாய் வாய்ந்த திரௌபதியன்றோ அவர்களை அடிமைத் தன்மையினின்றும் விடுவிக்க, மறு முறை சூதாடச் செய்து உய்வித்தவள்? அவள் தனது சதுரப்பாட்-டால் நியாயத்தை அவையில் வாதித்த திறம் மிகப் போற்றற் குரியது.

சகுனி தருமனுடைய பொருள்களையெல்லாம் கவருடி வென்ற பின்னர், பாண்டவர்களையே பணை-யமாக வைக்குமாறு தருமனைக் கேட்க, அவன் அங்-ஙனமே செய்து, தன்னையும் தன் தம்பிமாரையும் தோற்றான்; பின்னர், பணையமாக வைத்தாடும் பொருள் இன்மையால், சகுனி, அவனை நோக்கித் திரௌபதியைப் பந்தயப்பொருளாக வைக்குமாறு கூற, அவனும் அங்ஙனமே செய்து அவளையும் தோற்றான்.

தருமன் எல்லாப்பொருளையும் தோற்று அடி-மைப்பட, துரியோதனன் மிக்க செருக்கு உற்றுத் திரௌபதியை அவைக்குக் கொண்டுவருமாறு துச்-சாதனனுக்கு ஆணை ஈந்தான்.

துச்சாதனனால் அவைக்குக் கொண்டு வரப்பட்ட திரௌபதி மிக்க துயருற்றவளாய்க் 'கோ' எனக் கதறினள். பின்னர், அவள் அவையை நோக்கி, "அறிவுடைய ஐயன்மீர், யான் கூறுவனவற்றைக் கேட்டருள்வீர். தருமபுத்திரன் தன்னைத் தோற்றபின் என்னைத் தோற்றனனோ? அன்றி, என்னைத் தோற்றபின் தன்னைத் தோற்றனனோ? நீவிர் உண்மையை உரைமின். அவன் தன்னைத் தோற்பதற்குமுன்னரே என்னைத் தோற்றிருப்பனாயின், என்னைத் துரியோதனன் அடிமையாகக் கொள்வதிற் சிறிதேனுந் தடையின்று; அங்ஙனமின்றி, தன்னைத் தோற்றபிறகு என்னைத் தோற்றிருப்பின், யான் எங்ஙனம் அடிமையாதற்குரியவளாவேன்? தன்னைத் தோற்றபிறகு தருமன் அடிமையல்லனோ? அடிமையாய்விட்ட அவனுக்கு மண், பெண், பொன் முதலியவை உரிமை யில்லாதிருக்க, அவன் எங்ஙனம் என்னைப் பணயமாக வைத்து ஆடுதற்குரியவனாவன்? அங்ஙனம் அவன் என்னைப் பணயமாக வைத்தாடிய ஆட்டமே தவறுடையதாகும். இதனை நீவிர் நன்கு ஆய்ந்து நீதியைக் கூறுமின்" என்றனள்.

திரௌபதி கூறியவை நியாயவார்த்தைகளாகையால், அவ் வவையின்கண் இருந்த எவராலும் அவைகளுக்கு வேறுமாற்றஞ் சொல்லுதற்கு இயலவில்லை. அறிவிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்த விகர்ணன் ஒருவனே திரௌபதி நியாயமாக வாதிக்கின்றனள் என் றறிந்து, அவையிலுள்ளோரைப் பார்த்து, "அறிவுடையீர், நீவிர் நீதியைக் கூறினும்,

கூறுதிருப்பினும், என் மனத்தில் தோன்றும் நியா-யத்தை யான் கூறுவேன். வஞ்சகர்களால் தூண்-டப்பட்டுச் சூதில் விருப்பங் கொண்ட தருமன், தன்னைத் தோற்ற பிறகு பாண்டவர் ஐவர்க்கும் உரியளான திரௌபதியைப் பணயமாக வைக்கத் தனக்கு ஒரு சிறிதும் உரிமை யின்று. ஆகலான், திரௌபதி வெல்லப்பட்டவள் அல்லள் என்றே நான் எண்ணுகிறேன்" என்று நீதியைப் புகன்றான்.

விகர்ணன் எடுத்துக் காட்டிய நீதியைச் சிறி-தும் மனங்கொள்ளாது துரியோதனன் முறை தவ-றித் திரௌபதிக்குச் செய்த தீச்செயலால் அத்-தினபுரத்தில் சிற்சில உற்பாதங்கள் தோன்றின. அவற்றை யறிந்த திருதராட்டிரன் நடுக்க முற்று, திரௌபதியைப் பலவகையாகத் தேற்றி, பாண்ட-வர்களை நோக்கி, "நீவிர் இழந்த நாட்டினையும் செல்-வத்தையும் எனது ஆணையால் அடைவீர்" என்று இன்சொற் கூறினன். அவன் அங்ஙனம் கூறி-யும், துரியோதனன் சூதில் வென்றதைப் பாண்ட-வர்க்குக் கொடுக்க இசைந்திலன். அவன் மனக்கோ-ளுணர்ந்த திருதராட்டிரன் தருமனை நோக்கி, "மைந்த, உன் தம்பியர் சூதில் வென்றதை மீண்-டுந் தந்திட இசைந்திலர். ஆகையால், நீ நின் சகோ-தரரோடும் மனைவியோடும் சின்னாள் காட்டில் வதிந்து, பின்னர், இவண் வந்து உனக் குரிய நாட்டினைப் பெறக் கடவாய்" என்றான். அக் காலை, அருகிருந்த திரௌபதி தருமனை நோக்கி, அடிமைத் தன்மை நீங்குமாறு மறுமுறை சூதாட வேண்டி-

ளுள். அவள்மொழிக் கிசைந்த தருமன் அங்ஙனமே சூதாடப் பொருந்தினன்.

தெள்ளிய மதி யுடைய திரௌபதி, சூதாடும்போது திருமாலின் பன்னிரண்டு திருநாமங்களையும் கூறி அவன்கருணையை யேத்தி ஆடுமாறு தருமனை வேண்ட, அவனும் அங்ஙனமே புரிந்து, திருமாலின் இன்னருளால் அடிமைத்தன்மையை வென்றனன்: பாண்டவர் அடிமைத்தன்மையி னின்றும் நீங்கி உய்ந்தது திரௌபதியின் அறிவின் ஆற்றலாலன்றோ? மகளிர், நுண்ணிய மதிகொடு நியாயத்தை யோர்ந்து சதுருடன் வாதிக்குந் திறமைவாய்க்கப் பெற்றவர் என்பதைத் திரௌபதி அவையின் கண்ணிருந்த அறிஞர் அனைவரும் மறுமாற்றங் கூறுதற்கியலாவண்ணம் வாதித்த செயலொன்றே நன்கு புலப்படுத்துகின்றது. பாண்டவர் பேராற்றல் படைத்திருந்தும், ஒரு பெண்ணின் துணை அவர்க்கு எத்துணை யின்றியமையாதிருந்தது என்பது இதனால் நன்கு விளங்கும்.

**தமயந்தி**

நளன் புட்கரனோடு சூதாடி, நாட்டினை யிழந்து தன் அருமந்த மனைவிமக்களோடு காடு சென்றான். வழி நடந் திளைத்த அவன்மக்களிருவரும் தந்தையை நோக்கி, "எந்தாய், வழியெல்லாங் கடந்தோமோ?" என்று வினவினர். அதனைக் கேட்ட நளன் மிக்க துயரால் வாடி, இன்னது செய்வது என்று தெரியாது சித்திரம் போல் திகைத்துநின்றான். பின்னர், அவன் ஒருவாறு தேறித் தன் காதலியை

நோக்கி, "என தாருயிர் அமுதே, நம் மக்க ளிரு-வரையுங் கொண்டு கடுஞ்சுரம் போதல் ஏதமுடைத் தாகும்; ஆகையால், நீ இவருடன் வீமன்திரு நகர்க்கே மீள்வாய்" என்றான். அதனைக் கேட்ட தமயந்தி,

"குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக்" கென்றுரைத்தாள்
நோக்கால் மழைபொழியா நொந்து.

இதனால், தமயந்தி தன் மணாளனிடத்துச் செலுத்திய அன்பின் பெருக்கம் நன்கு விளங்கும். குலமகளுக்குக் கொழுநன் யாவற்றினும் சிறந்த-வன் என்ற வுண்மையைத் தமயந்தி உலகிற்கு ஒழு-கிக் காட்டினாள்.

தமயந்தி, மக்களைத் தன் தாதைபால் போக்கு-மாறு தன் கணவற்குக் கூற, அதனைக் கேட்ட மக்கள் கண்ணீருகுத்துக் கலங்கி, "எந்தம்மை வேறா-கப் போக்குதிரோ?" என்றனர். அவர் கூறிய சொற்களைக் கேட்ட தமயந்தி, மக்களைத் தன் மார்போடணைத்து மனங் கரைந்து நின்றாள்; இன்-னது செய்வதென்று தெரியாது மயங்கினாள்; அமு-தனைய குதலைவாய்மக்களை எங்ஙனம் பிரிவாள்! தன் இன்னுயிர்க் காதலனை விட்டு எவ்வாறு அகல்-வாள்! அவள்நிலை பெரிதும் வருந்தத்தக்கதே. காட்டில் வாழ்வதாயினும் கணவனோடு உறைதலே தன் கடனெனக் கருதிய அக் காரிகை பின்னர், தன் அருமைமக்களைப் பிரியத் துணிந்தாள். தம-

யந்தி தன் மக்கள் இருவரையும் தாய்மனை யனுப்பிக் காதலனோடு காட்டிடை வதிந்து வரு நாளில், நளன் தன்னொடு துன்புற் றுறையும் காதலியின் துயர் கண்டு மிக வருந்தி, ஒரு நள்ளிரவில் அவளை உறக்கத்தில் துறந்தான். காதலியைக் காரிருளில் கைவிட்ட நளன், வேற்றுரு வுற்று அயோத்தியை யடைந்து, இருதுபன்னனுக்குத் தேர்த்தொழிலும் மடைத்தொழிலும் புரிந்துவந்தான்.

நளனைப் பிரிந்த தமயந்தி, பெருந்துயருற்று ஆவினைப் பிரிந்த கன்றேபோல் மனங்கலங்கி நின்றாள். பின்னர், அவள், தன் கற்பின் வன்மையால் தனக்கு நேர்ந்த பல்வகை இன்னலினின்றும் பிழைத்துத் தன் தாதையின் மனை அடைந்தாள். தலைவனைப் பிரிந்து தாய்மனை வதிந்து வந்த தமயந்தி, உயிர் நீத்த உடலேபோன்று பொலிவிழந்திருந்தாள்.

நளன் அயோத்தியில் இருதுபன்னனுக்குத் தேர்த்தொழிலும் மடைத்தொழிலும் புரிந்துவருவதைச் சுவேதனால் அறிந்த தமயந்தி மனம் மிக வருந்தினாள். பின்னர், அவள் அவனை விளித்து,

"மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்தன்" என்றாள் பரிந்து.

பின்னர், சுவேதன் அயோத்திக்குச் சென்று இருதுபன்னனை நோக்கி, "தமயந்திக்கு இரண்டாஞ் சுயம்வரம் நிகழும் என்று வீமன் முரசறைவித்தான்.

அந் நாளும் நாளையே" என் றறிவித்தான். அதனை யறிந்த இருதுபன்னன், தன் தேர்ப்பாகனாகிய நளனோடு விதர்ப்பநாட்டிற்குச் சென்று, ஆங்கொருபால் வீற்றிருந்தான்.

நளன் பரிகளை இளைப்பாற்றிய பின்னர், அடிசில் சமைக்க மடைப்பள்ளியுட் புகுந்தான். அவன் மடைத்தொழில் புரிவதை யறிந்த தமயந்தி தன் மக்கள் இருவரையும் அவன்பால் போக்கினாள். மடைத்தொழில் புரிபவன் நளனே யென்று மக்களால் நன்கறிந்த அவள் அவன்பா லணைந்து, அவன்றன் இணையடிகளைத் தொழுது நின்றாள். பிரிந்தவர் கூடினால், அவர்நிலை பேசவும் வேண்டுமோ?

கற்பரசியாகிய தமயந்தி, தன் கூரிய அறிவின் திறத்தால் இரண்டாஞ்சுயம்வரம் என் றொன்றைப் புனைந்து விடாளாயின், நளன் எங்ஙனம் தனது வலவத்தொழிலினின்றும் நீங்கி, ஆவி யனைய மனைவி மக்களைக் கண்டு பழைய நிலையை எய்துவன்? ஆடவர் இழிந்த நிலையினை வாழ்க்கையில் எய்தியக்கண்ணும், அவருடன் இன்புற்றுறைந்து, அவரைத் தமது சிறந்த அறிவினைக்கொண்டு உயர்நிலையுட் புகுத்துபவர் மகளிரே என்பதைத் தமயந்தி உலகிற்கு அறிவுறுத்திநின்றாள்.

**சந்திரமதி**

நாயகன் வாய்மையினின்றும் பிறழாவண்ணம் சந்திரமதி தன் அருமந்த மகனோடு காலகண்டனுக்கு அடிமைப்பட்டுத் தொண்டாற்றியதை நாம் படிக்கும்

போது, நம்மையே மறந்து கண்ணீர் உகுக்க நேர்கின்றது.

சந்திரமதி காந்தள் போன்ற தன் கரங்களால் உலக்கையைப் பற்றி, மெய்யினில் வெயர்நீர் சிந்த, விழியினின்றுங் கண்ணீர் அருவிபோல் வழிந்தோட நெற் குற்றியது தன் நாயகன்றன் வாய்மையைக் காத்தற்கன்றே?

சந்திரமதி தன்னை விலைகொண்ட மறையவனால் பெருந்துயருற்று, அவனில்லத்து வதிந்துவருநாளில் இடர்மேல் இடர் வந்ததென்ன அவள் தனயன் கட்செவியால் கடிப்புண்டிறந்தான். தனயன் மாண்டதைக் கேட்ட சந்திரமதி ஊதுலைக் குருகின் உயிர்த்து வீழ்ந்தாள். அவள் நாட்டினையிழந்து, கணவனைப் பிரிந்து, மறையவனுக்கு அடிமைப்பட்டு வருந்திநிற்கையில், செவ்வேளனைய செம்மலையும் இழப்பளாயின், அவளது துயரினை எதற்கு உவமித்துச் சொல்லுவது!

சந்திரமதி ஒருவாறு தனது பெருந் துயரினின்றுந்தேறி, மறையவனுக்குச் செய்யவேண்டிய பணிகள் யாவற்றையும் செவ்விதின் ஆற்றிய பின்னர், அவனை யணுகி, "ஐய, அரவந் தீண்டி யென்மகன் இறந்தான்; யான் அவன்பாற் செல்ல நின் திருவுளமறியேன்" என்றாள். அதனைக் கேட்ட அம் மறையவன், கடுஞ்சொல்லால் அவளைக் கடிந்து, "பயனற்றவளே, எனது பொருளுக்கு ஒரு கெடுதி நேரிட்டால், அதனல் குறை எனக்கேயன்றி உனக்கென்ன? எற்கு விலைப்பட்ட அச் சிறுவனுக்குத்

தாயுமுண்டோ? ஆகையால், நீ போதலைத் தவிர்தி'' என்றான். அவன்சொற் கேட்ட சந்திரமதி,

அடிமையே யெனினு மைய!
அந்தரத் திறந்தா னென்றால்
கொடியனேன் றனக்குப் பெற்ற
வயிறுதான் கொதித்தி டாதோ
படியின்மே லிறந்தான் றன்னைப்
பார்த்தெடுத் தடக்கிக் கங்குல்
விடியுமுன் வருவேன் நல்கு
விடையெனத் தொழுது வீழ்ந்தாள்."

சந்திரமதி வருந்தியதைக் கண்ட மறையவன் மனஞ் சிறிது இளகி அவட்கு விடை ஈந்தனுப்பினான்.

மறையவன் விடையினைப் பெற்ற சந்திரமதி, ஓடிச் சென்று, மாண்டு கிடந்த மைந்தனைக் கண்டு, அண்டரும் மறுகி யேங்குமாறு அரற்றிநின்றாள். பின்னர் அவள் இறந்த மைந்தனை நோக்கி,

"செங்கோல் அறத்தின் முறையே செலுத்து
திறலோ னெவர்க்கு முரவோன்
வெங்கோப யானை விறன்மன்னன் நம்மை
விடுவிக்க வெண்ணி வருநாள்
பங்கே ருகத்து மலர்போல் விளங்கு
வதனு மகிழ்ந்த பரிவால்
எங்கேயெ னைசை மகனென் றுரைக்கில்
எதிரேது சொல்வன் மகனே"

என்று அரற்றினள்.

அறநெறியில் நின்றொழுகுவார் இடையில் எத் துயர் அடையினும், இறுதியில் வெற்றி பெறுவர்

என்பதைச் சந்திரமதி உறுதியாகக் கொண்டவ ளாகையால், அறத்தாற்றில் நின்ருெழுகுந் தன்னுயகன் எப்படியும் தன்னையும் தன் மகனையும் விடுவிக்க வருவான் என்று நம்பி, 'வெங்கோப யானை விறல் மன்னன் நம்மை விடுவிக்க வெண்ணி வருநாள்' என்ருள். அங்ஙனம் அவள் பலவாறு அரற்றிப் பின்னர், இறந்த மைந்தனை யெடுத்துச் சுடுகாட்டிற்குச் சென்ருள். ஆண்டு வெந்து குறைந்த கட்டைகளைப் பல திக்கினின்றும் கொணர்ந்து அழல் மூட்டி அதன் மேல் தன் மைந்தனை வைத்தாள். காடு காத்துநின்ற அரிச்சந்திரன் அழல்விளக்கங் கண்டு ஓடி வந்து, கரவாகச் சந்திரமதி பிணத்தைச் சுடுதற்குப் பொருனுய்க் காலினுல் கான்முளையை உதைத்துத் தள்ளினுன். அங்ஙனம் உதைத்ததும், சந்திரமதி மனமாழ்கி, அவனடி வீழ்ந்து, "சுடு கூலி தருதற்கு என்னிடம் பொருளொன்று மில்லையே! என் செய்வேன்!" என்று பணிந்துரைத்தாள். அவள் கூறியதைக் கேட்ட அவன், " நீ பேசுவதில் மிக வல்லை; இந்திரசாலமும் பழகியுள்ளாய் போலும்! மங்கலநாண் உன் கழுத்தில் பொலிந்து விளங்க, ஒரு பொருளும் இல்லை யென்று சொல்லுவது சற்றும் ஏலாது" என்ருன். அங்ஙனம் அவன் கூறிய சொற்கள் செவியுட் புகுமுன்னர், அவள், உயிர்நிலையில் அம்பேறுண்ட மானைப்போல் பதை பதைத்துப் படிமேல் சாய்ந்தாள். 'அரிச்சந்திரனுக் கன்றிப் பிறரெவர்க்குந் தோன்றுதற்கரிய என் மங்கலநாணைப் புலையன் காணவும் நேர்ந்ததே!' என்று அவள் புலம்பி,

"அற்புக் காழி யணுனரிச் சந்திரன்
விற்பப் போயின மேன்மைக் குலத்தொடும்
பொற்புப் போம்பொறை போம்நிறை போமென்றன்
கற்புப் போவதென்?" என்று கலங்கினுள்.

இதனுல், அவள் கற்பினை எத்துணைச் சிறப்பாக மதித்து ஓம்பினுள் என்பது இனிது புலனுகும்.

அரிச்சந்திரன் தன் மனைவி சந்திரமதியை முதுகாட்டில் நிறுத்தி வாள் கொடு வெட்டுதற்கு நேர்ந்த காலை, அந் நிலைக்குப் பெரிதும் வருந்திச் சோர்ந்து நின்ருன். அதனை யுணர்ந்த சந்திரமதி மனவுறுதியுடையவளாய்த் தன் நாயகனைப் பார்த்து,

"பொருந்து நீத்தத்தில் புற்புத வாழ்வைநீ மெய்யென்று
அருந்த வத்தையும் அறத்தையும் மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ"

என்று அறவுரை கூற, அவளால் தெருண்ட அரிச்சந்திரன் வாட்படை வலக்கையின் எடுத்தான்.

நாயகன் அறத்தினின்று சிறிது கோடுதற்கு நினைந்த காலை, நாயகியே உலகின் நிலையாமையையும், அறத்தின் அழிவில்தன்மையையும் விளக்கி அவனைக் காப்பவளாவாள் என்பதைச் சந்திரமதி தனது அருஞ்செயலால் உலகிற்கு அறிவுறுத்தினுள்.

**மங்கையருரிமை**

இதுவரை மங்கையர்மாண்பினை ஒரு சிறிது விளக்கினேம்; இனி, அத்தகைய மங்கையரின் உரிமையைச் சிறிது ஆராய்வாம்.

மங்கையர் உரிமையற்றவ ரென்றும், அவர் பிறந்தநாள்தொடங்கி இறுதிவரை ஆடவரின்

காவலுக்குள் அடங்கி நடக்கற்பாலரென்றும், இன்ன பல இக்காலத்துச் சிலர் இயம்பக் கேட்கின்றோம்: உரிமை என்பது ஒருவர் கொடுத்தற்கும் மற்றொருவர் பெறுதற்கும் உரியதோர் பொருளன்றென்றும், அது கடவுளால் அளிக்கப்பட்டதோர் இயற்கைக்கொடையென்றும் அவர் ஓர்ந்திலர்போலும்: உரிமை யற்றவர் அடிமைகளன்றோ? அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து, ஆடவர்க்குத் துணையாய் உறையும் மங்கையர் எங்ஙனம் உரிமை யற்ற அடிமைகளாவர்?

தந்நலம் கருதும் ஆடவர் மங்கையரைத் துய்த்தற்குரிய பொருளாக என்று மதித்தனரோ, அன்றுதொட்டே மங்கையர் தம்உரிமையை யிழந்தவராயினர்; ஆடவர்க்கு அடிமைகளே ஆயினர்.

நம் நாட்டு மங்கையர் அறவொழுக்கங்களையும் தாய்மைத்தொண்டையும் தமக்கு உரிமையாய்க் கொண்டொழுகிவந்தனர். ஆடவரோடு போராடுவதை அவர் பெண்ணுரிமையாய்க் கொண்டாரல்லர். மங்கையர் ஆடவரோடு கூடி உடலும் உயிரும் ஒன்று பட்ட பான்மைபோல் வாழ வேண்டுமென்றே கடவுளால் படைக்கப்பட்டவராவர்.

ஒரு நாடு செழுமை பெற்றிருப்பதற்குக் காரணம் அந்நாட்டுமங்கையர் உரிமை பெற்றிருத்தலேயாகும். பண்டைநாளில் நம் நாட்டுப் பெண்மணிகள் கல்வியாளர்களாயும், வீரத் தாய்மார்களாயும், அரசிகளாயுமிருந்து அருந்தொண் டாற்றி வந்தனர். அவர் உரிமையற்றிலர்; அடிமைக்

குழியில் வீழ்ந்திலர். அந்நாளில் நம் நாடு பெற்றிருந்த செழுமைக்கோர் அளவில்லை.

பண்டைக்காலத்தில் நமது நாட்டில் மங்கையர் பல்வகைத் துறைகளிலும் உரிமை பெற்றிருந்தனர். தலைவன் வேள்வி செய்வானாயின், தலைவி அவனுக்குத் துணையாய் நிற்பள். நாயகன் பிழை பட மந்திரத்தை யுச்சரிப்பானாயின், தலைவி அப் பிழையைத் திருத்திச் செம்மை செய்வது வழக்காயிருந்தது. இதனால், மங்கையரும் ஆடவர்போன்றே கல்வியில் தேர்ச்சி யுற்று விளங்கினர் என்பது போதரும். சங்கராசாரியருக்கும் மண்டனமிசிரருக்கும் நிகழ்ந்த வாதத்தில் நடுநிலைமைத்தலைமை வகித்தவள் பாரதி என்னுமோர் மாண்புடைய மங்கை யன்றோ? சங்கரரைப்போன்றும் மண்டனரைப் போன்றும் கல்விப் பயிற்சியைப் பாரதி பெறுதிருப்பளாயின், அவ்விருபேரறிஞரும் அவளை எங்ஙனம் நடுநிலைமைத் தலைமை வகித்தற்குத் தேர்ந்தெடுப்பர்?

பண்டைத் தமிழ்நூல்களை நாம் நன்கு ஆராய்வோமாயின், மங்கையர் பண்டைநாளில் பெற்றிருந்த உரிமை செவ்விதின் புலப்படும். நம் முன்னோர் பெண்களைத் தாழ்வாக ஒரு நாளும் கருதினாரில்லை. அந் நாளில் பாரிமகளிர், ஔவையார், வெள்ளிவீதியார் முதலிய கணக்கற்ற பெண்மணிகள் ஆண்புலவருடன் கவியுலகைச் சிறப்பித்தனர். அப்பெண்மணிக ளனைவரும் உரிமை யற்றவரோ? உரிமையற்றவர் எங்ஙனம் கல்வி பயில்வதற் குரியவராவர்? பண்டைக்காலத்தில் நம் நாட்டில் பெண்களுக் குரிமை யிருந்தமையால் அவர்கள் வீரம்

பொருந்தியவராயும், கல்வியாளராயும், அருஞ் செயல் ஆற்றுதற் குரியவராயும் மிளிர்ந்தனர். அவர்தம் வீரச்செயல் எந்நாட்டாராலும் போற்றற் குரியது.

நந்தம் பண்டைப் பனுவலாகிய புறநானூறு ஒரு நரைமூதாட்டியின் வீரத்தை நமக்கு நன்கு அறிவிக்கின்றது.

மயிர் நரைத்துத் தோல் சுருங்கிய ஒரு கிழவி-யின் மகன் போர்க்கோலம் பூண்டு சமர்க்களம் புகுந்தான். அம் மகன் போரில் புறப்புண்பட் டான் என்று பலரும் அம் முதியவளுக் கறிவிக்க, அவள் மிகச் சினந்து, கையில் வாளினைத் தாங்கி, 'நும் கூற்று உண்மையாயின், அவனுக்குப் பாலூட்டிய எனது மார்பினை இவ் வாளான் அறுப் பேன்' என்று வஞ்சினங் கூறி, போர்க்களம் புகுந்து, மைந்தனைத் தேடி ஆண்டுக் குவிந்து கிடந்த பிணங்களை அவ் வாள்கொடு புரட்டிப் பார்த்-தாள்; அங்குத் தன் அருமந்த மகன் மார்பிலே புண்பட் டிருத்தலை அவள் கண்டு, அவனை ஈன்ற பொழுதினும் பெரி துவந்தாள். அவள் வீரம் இருந்தவா றென்னே!

மற்றொரு மங்கை, தனது ஊர்மேல் வந்துற்ற சேனைக்குப் பொறாதவளாய்த் தன் மடியகத்துப் பாலருந்தும் பச்சிளங்குழந்தையைப் போர்க்களம் புகுத்திய வீரத்தைக் குறித்துப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுஞ் செய்தி உயர்வுநவிற்சி-யாகாது. உண்மையில் அம்மங்கை, வீரக் குடியில்

பிறந்து, வீரனை மணந்து, வீரத்திலேயே பழகியவளா-கையால், போர் வந்துற்ற காலை, அவள்தன் வீரம் குழந்தை யென்ற வுணர்ச்சியையும் மறைத்து நின்றது. பெண்கள் பண்டைநாளில் உரிமை அற்ற-வராயின், எங்ஙனம் வீரத்தாய்மார்களாய்த் தம் அரும்பணி யாற்றல் கூடும்?

உயர்ந்தவர் ஆடவரோ, மகளிரோ?

'உலகவியலைச் செவ்விதின் அறிந்த நம்முன்-னோர் பெண்களைப்பற்றிக் கூறியவை யனைத்தும் கற்பனையே யாகும். பெண்கள் ஒரு நாளும் ஆட-வர்க்கு வழிகாட்டிகளாகார்; ஆடவரே கருமத்தை எண்ணித் துணிதற்கு ஏற்புடையவர்' என்று நம்ம-வரிற் சிலர் இக்காலத்து நினைத்தலும் சொல்லுதலு-முண்டு.

நம் முன்னோர் அனைவரும் பெண்களை மதிக்கும் வகையில் தவறினரோ? அன்றி, தவறிழைத்-தவர் நாமோ? கம்பர், இளங்கோவடிகள், சாத்தனர் முதலிய பெரியார்நூலிற் பிறந்த அரிவையர், நம் பொழுதுபோக்கின் நிமித்தம் அமைக்கப்பட்ட பது-மைப் பெண்களோ? அல்லது அப் பெண்மணிகள், அப் பதுமையினும் இழிவாய பொய்த்தோற்றங்-களோ? அப் பெரியார்கருத்தின்படி உயர்நிலை-யினைப் பெண்கள் எய்திவிடுவராயின், அதனல் நாட்டில் நன்மையின்றித் தீமையும் குழப்பமும் குடிகொள்ளுமோ? இவ் விடயத்தில் முடிவாக மனி-தரின் மனச்சாட்சியே உண்மையை யுரைப்பதாகும்.

இக் காலத்திற் சிலர், 'ஆடவர் உயர்ந்தவரா? பெண்கள் உயர்ந்தவரா?' என்று வினவுவர். அங்ஙனம் வினவுதல் தவறாகும். ஒரே தன்மை யுடைய இரண்டு பொருள்களை யெடுத்தே உயர்வு தாழ்வினை நோக்குதல் வேண்டும். படைப்பிலேயே வேறா யமைந்த ஆண், பெண் என்னும் அவ்விருவருள் உயர்ந்தவர் எவர், தாழ்ந்தவர் எவர் என்பதை எங்ஙனம் ஆராய்தல் கூடும்? அங்ஙனம் ஆராய்தல் அறிவின்மையையே குறிப்பதன்றி வேறன்று.

ஆடவரிடத்தில்லாச் சில அரிய குணங்களை நாம் பெண்டிரிடத்துக் காண்கின்றோம்; பெண்களிடத்தில்லாச் சில சீரிய குணங்களை ஆடவரிடத்துக் காண்கின்றோம். பெண்கள் ஆடவரோடு கூடியே பெருமையைப் பெறுவர். ஆடவரும் அங்ஙனமே பெண்களோடு கூடியே சிறப்புறுகின்றனர். இருவரும் ஒருவருக்கொருவர் ஒன்றினைக்கொடுத்து மற்றொன்றினைப் பெறுபவராவர். இவ் விருவரின் நிறைவும் இன்பமும் ஒன்றினைக் கொடுத்து மற்றொன்றினைப் பெறுவதனால் விளைவனவாகும்.

இனி, நாம் ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் இயற்கையிலேயே வெவ்வேறா யமைந்த குணங்கள் எவை யென்பதைக் கவனிப்போம்.

கருமத்தை நாடி அதனை யிழைத்தலிலேயே கருத்துடையவராதலும், முன்னேற்றத்தையே முதன்மையாகக் கொள்ளுதலும், நூதன மாயவற்றைத் தேடுதற் கெண்ணுதலும், போரையும் அதனாற் போதரும் வெற்றியையும் விரும்புதலும் ஆடவ-

ரின் அருங்குணங்களாகும். பெண்களோ, அங்ஙனமன்றி, இல்லத்தமர்ந்து அமைதியுடன் தம தாட்சியைச் செலுத்தும் இயற்கைப்பண்பு வாய்ந்தவர். போரையும் வெற்றியையும் அவர்மனம் பற்றுவதின்று. அன்னர், தம் பொறிகளைப் புன்னெறியிற் செலுத்தாது தம்மைக் காத்தலிலேயே முயல்வர்; வெற்றிபெற்று வரும் தம் நாயகரைப் புகழ்ந்து, இன்சொற் கூறி அவரோடு குலவி வாழ்வர்.

ஆடவர் தமது இயற்கைக்குணத்திற் கேற்ப, மேதினியில் வீரமும் முயற்சியும் வாய்ந்த பெருங் காரியங்களை மேற்கோண்டு இன்னலை எதிர்த்து நிற்பர்; அங்ஙனம் துன்பத்திலேயே பழகிக் கலங்கா நெஞ்சம் படைத்தவராவர்; தாம் பல் வகையில் துன்புறினும் பெண்களைத் துன்பமொன்றும் அணுகாவண்ணம் தம் முயிரையும் ஈந்து காப்பர்.

பெண்கள் தமது அரசினைச் செலுத்தும் இல்லத்துத் துன்ப மொன்றும் நுழைவ தின்று. அவர் புரியும் ஆட்சியின்கீழ்க் குழப்பமும் கலக்கமும் குடிகொள்வதில்லை; அச்சமும் ஐயமும் ஒரு சிறிதும் அணுகுவதில்லை. ஆனல், ஆடவரேனும் மகளிரேனும் தம் அகத்துள் உலக இன்னல்கள் புகுமாறு இடம் தருவராயின், அன்றே அவரில்லம் வெளியுலகின் ஒரு பகுதியைக் கூரைவேய்ந்து விளக்கேற்றியதாய்விடும். இவ்வாறன்றி, தூய்மைக் கோர் இருப்பிடமாய், தெய்வங்கள் உறையும் கோயிலாய், கோடையில் இளைப்பாற்றிக் கொள்ளுதற்கோர் குளிர் தருவாய், வழி தப்பிய மாலுமியைக் கரை

சேர்க்கும் கலங்கரைவிளக்கமாய் விளங்குவதே விழுமிய இல்லமாம். மாண்புடைய மங்கை யொருத்தி யிருக்குமிடம் கூரையும் சுவரு-மின்றி வெட்டவெளியே யாயினும், அது சிறந்ததோர் இல்லமே யாகும். அவள் தங்குமிடம் பலவித வண்ணத்தால் தீட்டிய மாளிகையினும் மாண்புடையதாகும். அவளுறையு மிடத்து இல்-லாத தொன்றில்லை. அதனுலன்றே வள்ளுவரும்

"இல்லதென் இல்லவள் மாண்பானுல்"

என்றார்.

ஆடவரும் மகளிரும் இயற்கையிலேயே வெவ்-வேருய சீரிய குணங்கள் வாய்க்கப் பெற்று, ஒரு-வர்க்கொருவர் இன்றியமையாத நிலையில் நின்று, இல்லறமாம் நல்லறத்தை இனிது நடத்துதற்குரிய-ராவர். ஆதலின், அவருள் ஒருவரை உயர்ந்தவ-ரென்றும் மற்ருெருவரைத் தாழ்ந்தவரென்றுங் கருதுதல் பேதைமையின்பாற் படுமேயன்றி வேறன்று.

**பெண் கல்வி**

இனி, மங்கையர் தமக்குரிய உயர்நிலையை யெய்தி, அறநெறி பிறழாது தமது அரும்பணியாற்று மாறு அவர்க்கு எத்தகைய கல்வியை நாம் அளித்-தல் வேண்டும் என்பதைப்பற்றிச் சிறிது ஆராய்-வோம்.

பெண்கள் கல்வி பயில்வதன்முன் தம் உட-லினை நன்கு ஓம்புதல் வேண்டும். கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலிய எல்லாவற்றிற்கும் நிலைக்கள-

ணுவது உடலே யாகும். உடலினை யோம்பாது வெறுங்கல்வியைப் பயிலுதல் யாதொரு பயனையும் விளைக்காதென்பது திண்ணம். கல்வியையும் அறிவையும் பயன்படுத்த நல்லுடல் இன்றியமையாததாகும். பெண்களின் மெய்ந்நலம் திரண்டு வளரவும், உள்ள அழகு பொலிவுடன் விளங்கவும், போதிய உடற்பயிற்சி அவர்க்கு இன்றியமையாதது. பெண்களின் உடல் உரத்தினைப் பெறுதாயின், அவர் உருவம் பொலிவினைப் பெறுவதின்று.

தூய்மை — அகத்தூய்மை, புறத்தூய்மை என இருவகைப்படும். அகத்தில் நல்லெண்ணங்களைக் கொள்ளுதலே அகத்தூய்மையாகும். தீயவெண்ணங்கள் அகத்தில் உறுமேல், அவை உடல்நலத்தைக் கெடுத்து வாழ்வினைச் சிதைக்கும். ஆகவே உடலோம்பலுக்கு அடிப்படையாய் வேண்டற்பாலது அகத்தூய்மையே.

பெண்களுக்கு நாம் செய்யவேண்டிய கருமங்கள் இரண்டாகும். முதலாவது அவர்களுக்கு நாம் போதிய தேகப்பயிற்சியை யளித்து, அவருடல் சிறிது உரம் பெறுமாறு செய்வது; இரண்டாவது சிறந்த கல்வியால் அவர்கள் சீரியகுணங்களைப் பெறுமாறு செய்வது.

பெண்கள், ஆடவர் செய் தொழிலை யுணர்ந்து, அத் தொழிலில் அவர்க்கு உதவிபுரிதற்குரிய கல்வியை நாம் அவர்க்கு அளித்தல் வேண்டும். பல மொழிகளிலும் பெண்கள் சிறிது பயின்ற

பூான்மையால் வெல்லாமல் எவரையும் மருட்டிவிடும் ஆற்றல் அவர்களுக்குப் பெருமையை நல்காது.

"மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"

என்ற வள்ளுவரின் வாய்மொழியைப் பெண்கள் நன்குணர்ந்தவராய்த் தம் வீட்டுக்கு வரும் விருந்தினர்க்கு முகமலர்ச்சியோடு நல்வரவு கூறி, அவரை உபசரித்து, இன்னுரை யாடற்குரிய நல்லறிவைப் பெறுமாறு செய்தல் நம் கடனாகும். கல்வியறிவினால் பெண்கள் விருந்தோம்பலாகிய பெரும்பயனைப் பெறுவர் என்பதைக் கம்பரும்,

"பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே"

என்று கூறியுள்ளார்.

பெண்கள், பற்பல ஊர்களைப்பற்றியும் ஆண்டாண்டுள்ள மக்களைப்பற்றியும் அறிந்தால் என்? அறியாவிடில் என்? மகளிரை ஓர் அகராதியாக மாற்றுதல் மாண்புடையதன்று. சீரிய சரித்திரங்களை மங்கையர் கற்பாரெனின், அவைகளால் அவர் பெரும்பயன் உறுவர். மங்கையர் உண்மை, அறம், நீதி முதலியவற்றை அறையுஞ்சீரிய சரித்திரங்களைத் தமது நுண்ணிய மதிகொடு நுணுகி யாராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்ந்த மங்கையரே சரித்திரங்களின் உயிர்நிலையினைப் பற்றியவராவர். சரித்திரங்கள் பண்டைச்செய்தியையே உணர்த்துவன

என்று கொள்ளாது, அச் சரித்திரவாயிலாக உண்மையையும், அறத்தையும் பெண்கள் உணர்ந்து இன்புறுதல் வேண்டும்.

மக்கள் வாழ்தற்கும் விரும்புதற்கும் உரிய இவ்வுலகின் சிறுமையையும், கடவுள் வாழ்தற்கும் விரும்புதற்கும் உரிய அவ்வுலகின் பெருமையையும் பெண்களுக்குப் போதித்தல் ஆடவர்கடமையாகும். கடவுளின் பேரருளையும், அவராணையால் பஞ்சபூதங்கள் நிலைகுலையாமல் தத்தம் பணி இயற்றி நிற்றலையும் நாம் அவர்களுக்குக் கற்பித்தல் வேண்டும். அவர்கள் இவைகளை நன் குணர்ந்த பின்னரே, கடவுளிடத்து உறுதியுடன் அன்பினைச் செலுத்தி அவரை வழிபடுதற்குரியராவர். இங்ஙனம் அவர்கள் கடவுள்மாட்டு அன்பினைச் செலுத்தப் பயில்வராயின், இவ் வுலகில் பெரும்பயனைப் பெற்று, வாழ்க்கையில் உயர்நிலையை எய்துவர். இங்ஙனம் உயர்நிலை எய்திய மங்கையர், தம்மையும் தம் வழிப்பட்டாரையும் நல்வழிப்படுத்துவர் என்பது ஒருதலை.

பெண்கல்வி ஆடவர்க்கு அமைந்த கல்வியின் வேறுபடுந் தன்மைத்தாகும். அவர்கல்வி அங்ஙனம் வேறுபடுதல், அவர் பயிலும் முறையிலேயேயொழிய வேறின்று. ஆடவர், கல்வியில் மிக ஆழ்ந்தே செல்லுதல் வேண்டும். பெண்டிரோ அங்ஙனமின்றிக் கல்வியிற் சிறிதுபழகிப் பொது அறிவினைப் பெற்று, இல்லறமாம் நல்லறத்தை இனிது நடத்தற்குப் பெரிதும் பயன்பட்டுநிற்றல் வேண்டும்.

பெண்களின் மதி, மிக்க விரைவில் முதிர்ச்சியைப் பெறுந் தன்மைத்தாகலான், அவர்களுக்குச்

சிறந்த கல்வியை இளம்பருவத்திலேயே அளித்தல் வேண்டும். விழுமிய பொருளைப் பயத்தலின்றிப் படிக்குந்தோறும் தீய வெண்ணங்களையே பெருக்குகின்ற இக்காலக் கட்டுக்கதைகளைப் பெண்கள் புறக்கணித்தல் வேண்டும். அவை மிக்க சுவைநிரம்பியுள்ளனவே யாயினும், தாம் கொண்டுள்ள கற்பனையால் பெண்களின் உள்ளத்தைத் திரித்து, அவர்தம் வாழ்க்கையைச் சிதைத்துவிடும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. இயற்கையிலேயே விழுமிய குணத்தைப் பெற்ற மங்கையர், இழிந்த நூல்களைப் பயிலுதலால் சிறுமை யெய்துதல் அரிதாயினும், பொதுவாக அவர்கள் அந் நூல்களால் பெரும்பயனைப் பெறுவதில்லை யென்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மையாகும். ஆகையால், பெண்கள் இக்காலத்துக்கட்டுக்கதைகளையும், அவை போன்றே சிறந்த பயனை ஒரு சிறிதும் பயக்காப் பத்திரிகைகளையும் படித்து, தீநெறியுட் புகாவண்ணம் அவர்களை நாம் காத்தல் வேண்டும். பண்டைய இலக்கியங்கள் நிறைந்திலங்கும் நூல்நிலையத்துள் அவர்களைச் சிறிதேனும் அச்சமின்றிப் புகச்செய்யலாம். பண்டைய நூல்களை, படித்தற்குரிய நன்னூல்களென்றும் படித்தற்காகாத தீயநூல்களென்றும் பாகுபடுத்தற்கில்லை. பண்டைய இலக்கியநூல்களை ஒரு பெண்மணி நன்கு பயின்று வருவளாயின், அவளுக்குத் தக்கதின்னது, தகாததின்னது என்று நூல்களைத் தெரிந்து ஓதும் ஆற்றல் வாய்ந்துவிடும்.

நாம் ஒரு சிறுவன்குணத்தை நயத்தினாலும் பயத்தினாலும் பக்குவப்படுத்துவதுபோன்று ஒரு

சிறுமியின் குணத்தைப் பக்குவப்படுத்த இயலாது. சிற்றுளியைக் கொண்டு கல்லில் அழகியதோர் உருவத்தை நாம் விரும்பியவண்ணம் சமைப்பதே போல் ஒரு சிறுவனை நல்வழிப்படுத்தலாகும். அவனே சிறிது நற்குண முடையவனாயின், கல்வி-லும் சிறந்த வெண்கலத்தில் உருவங்களைச் சமைப்பதுபோல் வெகு இலகுவில் அவனைச் சீர் திருத்தலாகும். ஆனால் ஒரு பெண்ணை அங்ஙனம் நினைத்-துச் செய்தல் முடியாத காரியமாகும். பெண் என்பவள் ஒரு மெல்லிய மலர் போன்றவள். சிற்றுளி-யின் செயல் அவளை ஒன்றுஞ் செய்வதின்று.

புல் நிறைந்த வயலுள் மானென்றினை விடுவதே போல் பண்டைய இலக்கியநூல்கள் நிறைந்திலங்-கும் நூல்நிலையத்தில் பெண்களை விடுத்திடுவோமாயின், அவர் நன்னூல்களைத் தாமே தேர்ந்து தமக்-குப் போதிய பயிற்சியைப் பெற்று நன்கு வளர்வர்.

இலக்கியப்பயிற்சியுடன் பெண்களுக்கு மற்-றைக் கலைப்பயிற்சிகளும் இன்றியமையாதனவாம். காண்போர்கண்களைப் பறித்து, மனத்திற்கு மகிழ்ச்சியை விளைக்கும் சித்திரம், மாந்தர் நெஞ்சினை யுருக்கி இன்பத்தைப் பெருக்கும் இசை முதலிய கலைகளைப் பெண்கள் பயில்வராயின், அவரோடு உறையும் ஆடவர்வாழ்க்கை இன்பந் ததும்பி இலங்குவதாகும்.

இலக்கிய அறிவினையும், கலையின் பயிற்சியை-யும் பெற்ற மங்கையர் ஆன்மவுணர்வையும் பெறுவ-ராயின், நாற்றமார் பொன்மலரெனப் போற்றப் படுவர்.

**மங்கையர்செயலால் மன்பதை உறு பயன்**

மங்கையர்தம் இயல்பிற்கு அமைந்த கல்வி இஃ தென்றும், அக் கல்வியான் அவர்க்குப் பேர்தரும் பயன் இன்னதென்றும் அறிந்தோம். இனி, அவர் உலகிற்கு ஆற்றும் அருஞ்செயலும், அச்செயலால் விளையும் பயனும் இவை யெனக் காண்போம்.

ஆடவர் வெளியிலும், பெண்கள் அகத்திலும் அருந்தொண்டாற்றுவர் என்பது நம்முடைய பொதுவான கொள்கை. ஆனால் அது முற்றிலும் உண்மையன்று. ஆடவர் தந்நலங்குறித்தும், குடும்பக்காப்பின் பொருட்டும், சிற்சில பணிகளை மேற்கொள்பவ ராவர். அவர் அங்ஙனம் மேற் கொள்ளும் பணிகளே உலகிற்குப் பெரும்பயன் விளைப்பனவாய் விரியும். அஃதேபோல் பெண்கள் உலகிற் கியற்றுஞ் செயலும் அவர் இல்லத்தமர்ந்து இயற்றும் பணியின் விரிவேயாகும்.

ஆடவர்க்குரியதொழில், பொருளை இட்டலும், ஈட்டியதனால் குடும்பம் ஓங்குமாறு செய்தலும், ஓங்கிய குடும்பத்தை ஓம்பலுமாம். பெண்டிர் தஞ்-செயலோ, ஆடவர் தேடித்தந்த பொருளைக்-கொண்டு குடும்பத்தில் அமைதியும் ஆறுதலும் ஒருங்கே பொருந்துமாறு ஒழுகுதலாம். இங்ஙனமே ஆடவர், பெண்டிர் ஆகிய இவ் விருபாலரும் வெளி-யுலகிலும் தத்தமக்குரிய தனித்தொழிலைப் பெற்-றுள்ளனர். ஆடவர் தமதில்லத்தைக் காத்தல்போல் பழியும் பகையும் வாராவண்ணம் நாட்டையும் காப்-பவராவர். மகளிரும், இல்லத்தமர்ந்து அமைதி முதலியவற்றை விளைத்தல் போன்று, நாட்டின்கண்-

ணும் நோய்க்குச் சிறந்ததோர் மருந்தனையராய் நலிவினை யகற்றி நல்லெழில் திகழச் செய்பவராவர்.

போர் புரிதலே ஆடவரின் இயற்கைக்குணமாகும். அவர் சிறந்ததோர் காரணம் பற்றியே அமர்க்களம் புகுவரென்பதில்லை. மங்கையர் அவர் நிலையினை யோர்ந்து, மறத்தினின்று அவரைத் தடுத்தும், அறத்தையே புரியுமாறு தூண்டியும் தமது அரும்பணி ஆற்றுவர். மங்கையரே மக்கள் துன்பத்தின் ஆழத்தை அளத்தற் குரியர். அத் துன்பத்தைப் போக்கும் பான்மையைத் தெரிந்தவரும் அவரே.

மக்களின் உள்ளத்தை நன்கு ஆராய்வோமாயின், கடமையை யாற்றுதற்கு எழுகின்ற விழைவு அவ் வுள்ளத்தின் பள்ளத்தாக்கில் பதிந்து கிடப்பதைப் பரக்கக்காணலாம். அவருள்ளம் ஏற்றபோது அக் கடமையை யாற்றிப் பெரியதோர் இன்பத்தை எய்தும் இயற்கைத்தாகும் என்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும். அவர்தம் உள்ளத்து இன்னுமோர் அருங்குணத்தையுங் காணலாகும். அஃது, அவர்தம் அன்பிற்குரியபொருளைத் தேடிச் செல்லும் இயற்கைக்குணமாம். அன்பின் காரியமாகிய இவ்வுலகம் அன்பின் வடிவாய்த் திகழ்வதனால், மக்கள் தமது அன்பைச் செலுத்துதற்குரிய பொருளை அடையாராயின், உலகில் அவர் உய்வதே அரிதாய் முடியும். இவ்வன்பை அவர் சீரிய பொருளிடத்து நன்னெறியிற் செலுத்துவராயின், வாழ்க்கையில் விழுமிய பேற்றினைப் பெற்றவராவர்.

கடமையை ஆற்றுதற்கு எழும் விழைவைப் போன்றும், அன்பினைச் செலுத்துதற்கு எழும்

விழைவைப்போன்றும், மக்களுள்ளத்து அரசர் செல்வாக்கினைப் பெறவேண்டுமென்னும் விழைவும் இயற்கையாய் மிக ஆழ்ந்து கிடக்கின்றது: இவ் விழைவை உள்ளத் தமைத்தவன் எல்லாம்வல்ல இறைவனே யாவன். • இவ் விழைவினால் மங்கையர் பெறும் வல்லமை யாது? அவர் அவ் வரசவல்லமையைப் பெறுவது, கொடுவரியின் கொடுந்தொழிலைக் கொள்வதற்கன்று; தாடகை யெனும் அச்சழக்கியின் தீத்தொழிலைப் பெறுதற்குமன்று; நோயுற்றார்க்குச் சிறந்த மருந்தாய், அவர்தம் நோயினைக் களைதற்கும், நன்னெறி யறியாது திகைப்பவரை நல்லாற்றுப்படுத்தற்குமே யாம். மங்கையர் தம் அரும்பணியால், தம் மக்களுக்கும் மணாளர்க்கும் உண்மையரசிக ளாவதன்றி, உலகிற்குஞ் சிறந்த அரசிகளாய் அதனை உய்விப்பர். இத் தகைய அருஞ்செயல் வாய்க்கப்பெற்ற மங்கையர் நாற்புறமும் சுவரால் சூழப் பெற்ற இல்லமாம் பூங்காவில் அடைபட்டுக் கிடப்பராயின், இவ் வையகப் பூம்பொழிலில் விளங்கும் மக்களாம் அரும்புகள் அன்பெனும் பார்வையைப் பெறாது வாடி வதங்கும். அவர்நோக்கினைப் பெறின், அவ் வரும்புகள் மெல்ல மெல்லத் தம் இதழ்களை விரித்து, மணத்தினை வீசி, மகிழ்ச்சியைப் பெருக்கும். அவர்செம்பஞ்சு ஊட்டிய சேவடிப்போது தோய்ந்த இடமெல்லாம் பட்டமரந் தளிர்த்து மிகப் பூத்துக் காய்க்கும். அவ் வெழிலுடைய அரசிகள் உலகில் உலவுதலால் மக்கள் பசியும் பிணியும் பகையும் நீங்கப் பெற்று என்றும் இன்பநிலை எய்துவர்.

---